# செந்தமிழ்ச் செல்வி

## உள்ளுறை



சிலம்பு-௪௬] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௩, ஆடி (Aug. '72) [பரல்-௧௨

## ‘செந்தமிழ்ச் செல்வி’

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

க. பேராசிரியர், முத்து இராசாக்கண்ணனுர் அவர்கள்,
எம்.ஏ., பி.ஓ.எல்.
இயக்குநர், தமிழகவரசு தமிழ் வளர்ச்சித் துறை, சென்னை 1.

உ. ,, ‘சித்தாந்த கலாநிதி’, உரைவேந்தர்,
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள்.
தமிழ்ப் பேராசிரியர், தியாகராசர் கல்லூரி, மதுரை

ங. டாக்டர் ந. சஞ்சீவி, எம், ஏ., பி.எச்டி.,
தமிழ்த்துறைத்தலைவர், சென்னைப் பல்கலைக்கழகம்.

ச. செந்தமிழ்க் கலைமணி, வித்துவான்,
பண்டித, கா. பொ. இரத்தினம் அவர்கள்,
பி.ஏ. (ஆனர்சு) (லண்டன்) எம்.ஏ., பி.ஓ.எல். (சென்னை)
கொழும்பு.

ரு. திரு. கு. பரமசிவன் அவர்கள், எம்.ஏ., டிப். லிங்.,
தமிழ் விரிவுரையாளர், அமெரிக்கன் கல்லூரி, மதுரை.

சு. திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.,
நூலகர், மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை.

---

## ‘செல்வி’ உறுப்பினர்கட்கு வேண்டுகோள்

செந்தமிழ்ச் செல்வியின் 46ஆம் சிலம்பு இவ்விதழுடன் முடிந்து ஆவணித் திங்கள் 12—9—1972இல் 47ஆம் சிலம்பு முதல் இதழ் வெளிவர விருக்கிறது. இதுகாறும் உறுப்பினராய் இருந்து செல்விக்கு ஆதரவு நல்கிய அன்பர்கள் தொடர்ந்து கையொப்பத் தொகையினை அனுப்பி உறுப்பினராக விருக்கும்படி வேண்டுகிறோம். தாள் விலை அச்சுக்கூலி ஏற்றங் காரணமாகச் செல்வியின் ஆண்டு கையொப்பத்தை ரூ. 8. ஆக உயர்த்த வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. எனவே இத் தொகையினை அன்பர்கள் முன்பாக அனுப்பி வைப்பார்கள் என்ற நம்பிக்கையுடையோம். முன்பணமாக அனுப்பாதவர்கட்கு அடுத்து வரும் 47ஆம் சிலம்பின் முதல் இதழ் விலைபெறு அஞ்சலில் (V. P. P) அனுப்பி வைக்கப்பெறும். அதனைப் பெற விரும்பாதவர் முன்கூட்டியே அறிவித்திடில் வீணே அஞ்சற் செலவு ஏற்படாது.

மேலும் செல்வியின் ஆக்கங்கருதிப் புதிய உறுப்பினர்களைச் சேர்த்து அனுப்புமாறும், சேருமாறு நண்பர்களைத் தூண்டும்படியும் கேட்டுக்கொள்கிறோம். புதிதாக உறுப்பினராகச் சேர விரும்புவோர் இணைத்துள்ள அட்டையை நிரப்பி அனுப்புதல் வேண்டும்.

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு சசு | திருவள்ளுவர் ஆண்டு உ00ங, ஆடி ஆகஸ்ட் 1972 | பரல் கஉ |
|---|---|---|


## படந் தொகுத்தலிற் பட்டறிவு

(ங)

முன்னிதழில் தமிழ் ஆங்கிலப் பேரகர முதலியினைப் பெருமுயற்சியுடன் தொகுத்து அச்சிட்டுப் புகழ்பெற்ற கிறித்தவத் தமிழறிஞர் டாக்டர் மிரான் வின்சுலோ அவர்களின் உருவப்படம் கிடைக்கப் பெற்ற வரலாற்றைக் கண்டு மகிழ்வுற்றோம். இவ்விதழில் மேலைநாட்டுக் கிறித்தவத் தமிழறிஞர் சிலர் படங்களை அரிதின் முயன்று தொகுத்த வரலாற்றினைக் காண்போம்.

### க. இராபர்ட் கால்டுவெல் (1814 - 1891)

தமிழ் உயர்தனிச் செம்மொழி என்றும், வடமொழிச் சார் பின்றித் தனித்தியங்கும் ஆற்றல் பெற்ற தென்றும் 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' (A Comparative Grammar of the Dravidian Languages) என்ற சீரிய நூலை எழுதித் தமிழ் மக்கட்கு விழிப்புநிலையூட்டியவர் பேரறிஞர் டாக்டர் இராபர்ட் கால்டுவெல் ஆவர். அவருடைய உருவப்படம் பெரிய அளவில் தூத்துக்குடி கால்டுவெல் உயர்நிலைப் பள்ளியில் இருப்பதறிந்து அங்கே சென்று, பள்ளித் தலைமை யாசிரியர் ஒப்புதலுடன் அதனைப் படப்பிடிப்பகத்துக்கு எடுத்து வந்து படம் எடுத்துக் கொண்டேன். இந்தப் படம் மார்பளவுள்ளதே யாகும். சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராக விருந்த திரு செல்வக் கேசவராய முதலியார் எழுதியச்சிட்ட 'தமிழ்' என்ற நூலில் கால்டுவெல் ஐயரின் முழுவுருவப்படம்

காணப் பெறுகின்றது. அவர் மறைத்திரு மறைமலை யடிகளார்க்குத் தனித் தமிழுணர்ச்சியை யூட்டியவராவர். கால்டுவெல் அவர்களைப் பற்றிப் பேசினல் மறைமலையடிகளார் கண்கள் கலங்குவதைப் பார்த்ததுண்டு. அதேபோல் அவர் களுடைய சைவசித்தாந்தப் பேராசிரியர் வைதிக சைவசித் தாந்த சண்டமாருதம் சோமசுந்தர நாயகர் அவர்களை நினைப் பினும் அடிகளார் கண்கள் கலங்குவதுண்டு. டாக்டர் கால்டு வெல் எழுதிய 'திருநெல்வேலி மாவட்ட வரலாறு,' 'திருநெல் வேலி மிசன் வரலாறு' ஆகிய இரண்டு நூல்களும் மிகவுஞ் சிறப்புடையன. அவருடைய கடிதம் ஒன்றைப் பெறுவதற்கு எடுத்து வரும் முயற்சி இதுவரை கைகூடவில்லை. ஆனல் அவருடைய கையொப்பம் (Signature) மட்டும் பாளையங் கோட்டை கிறித்தவ சமய மாவட்டத் திருச்சபை அலுவலகத்தி Diocese office) லுள்ள திருமுழுக்குப் பதிவேட்டி (Baptism register) லிருந்த அவர் எழுதிய சான்றுக் கையொப்பத்தைப் படிவரை செய்துகொண்டு அதனை மறைமலையடிகள் நூலகத்திலுள்ள புலவர் பெருமக்கள் கையொப்பக் கோப்பிற் சேர்த்துக் காட்சியாக வைத்திருக்கிறேன். அவருடைய கடிதம் பெறுவதற்கு மேலும் முயன்று வருகின்றேன்.

## உ. டாக்டர் சி. யு. போப் (1820 - 1903)

தமது கல்லறையில் தம்மைத் 'தமிழ் மாணவன்' என்று பொறித்தல் வேண்டுமெனக் கூறியவரும், திருக்குறள், நாலடி யார், திருவாசகம் ஆகிய சிறந்த தமிழ் நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துப் பதித்தவரும், ஆங்கிலேயர்கள் தமிழ் மொழியை எளிதிலே கற்றுக் கொள்ளும்பொருட்டு இலக்கண நூல்கள், தமிழ்ச் செய்யுட் கலம்பகம் முதலிய நூல்களை இயற்றி யவருமான டாக்டர் போப் உருவப் படம் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள சாயர்புரம் என்னும் ஊரிலிருக்கும் 'போப் நினைவு உயர்நிலைப் பள்ளி'யில் இருப்பதறிந்து அதனைப் பெறும் பொருட்டு என் கெழுதகை நண்பர் புலவர் அ. தங்கையா நாடார் அவர்களுடன் கழக இயங்கியிற் சென்றேன். அப் போதிருந்த பள்ளித் தலைமை யாசிரியர் திரு சாம் விக்டர் அவர்களுடைய ஒப்புதலுடன் டாக்டர் போப் உருவப் படத்தைத் திருநெல்வேலிக்கு எடுத்து வந்து படம் பிடித்துக் கொண்டு அதனைத் திருப்பி யனுப்பி வைத்தேன்.

டாக்டர் போப் தாம் ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பதற் காகத் திருக்குறள், நாலடியார், திருவாசகம் ஆகியவற்றின் தமிழ் மூலப்படிகளில் தமது கைப்படச் சீர் பிரித்தும் குறிப்

புக்கள் எழுதியு மிருந்தனர். அவை தனித்தனித் தாள் களாகப் பிரிந்தும் சிதைந்தும் ஒதுக்கப் பெற்றுக் கிடந்தமை யினைப் பார்த்து அவற்றை யான் எடுத்துக் கொள்ளலாமா எனத் தலைமை யாசிரியரிடங் கேட்டேன். அவர்களும் இசைவு தந்தனர். அவற்றை எடுத்து வந்து உயர்ந்த கட்டடஞ் செய்து மறைமலையடிகள் நூல் நிலையத்தில் காட்சியாக வைத் திருக்கின்றேன். அவற்றைப் பார்ப்பவர்கள் டாக்டர் போப் தமிழ் நூல்களை எங்ஙனம் போற்றிப் படித்துத் தமிழ் மொழிக்குத் தொண்டு செய்துள்ளார் என்பதை யுணர்ந்து மகிழ்ந்து பாராட்டுகின்றனர். அவர் படித்த நூலொன்றில் அவர் தமது கைப்பட எழுதிய இரண்டு கடிதங்கள் இருந்தன. அவற்றை யும் தலைமையாசிரியரின் ஒப்புதலுடன் எடுத்து வந்து புலவர் களின் கடிதக் கோப்பிலே காட்சிக்கு வைத்திருக்கின்றேன்.

### ௬. தத்துவ போதகர் : இராபர்ட் டிநொபிலி (1577 - 1656)

அவர் இத்தாலியிலிருந்து தமிழ்நாட்டிற்கு வந்தவர். தமிழ், சமற்கிருதம் இரண்டையும் நன்கு கற்றுக்கொண்டு தமிழ்நாட்டுப் பார்ப்பனரைப்போல் உடை உடுத்திக்கொண் டனர். அவர் கிறித்தவ சமயத்தைப் பரப்பும்பொருட்டுத் தமிழில் சில உரைநடை நூல்களை எழுதியுள்ளார். தமிழ் போர்ச்சுகிசு அகராதி அவர் எழுதிய நூல்களில் ஒன்றாகும். அவருடைய படம் மதுரை டிநொபிலி அச்சகத்திலே பெரிய அளவில் இருக்கிறது. அதைக் கொண்டு வேறு படம் எடுக்கப் பெற்றது.

### ௪. பெஸ்கி என்ற வீரமாமுனிவர் (1680 - 1742)

முதன் முதல் 'சதுரகராதி' என்னுந் தமிழ் அகர முதலியைத் தொகுத்தவர் வீரமாமுனிவர் ஆவர். தமிழ் இலத்தீன் அகராதி போன்ற சில அகர முதலிகளையுந் தொகுத் தவர். கம்பராமாயணம் போல் 'தேம்பாவணி' என்ற காவியத்தைப் பாடியவர். அவர் தமிழ் முனிவர் போன்று உடையணிந்து தென்பாண்டி நாட்டில் சிற்றூர்களுக்குச் சென்று கிறித்தவ சமயத்தைப் பரப்பி வந்தனர். அவருடைய உருவப்படம் அச்சிடப் பெற்ற சில நூல்களில் காணப் பெறு கின்றது. அதனைக் கழக ஓவியரைக் கொண்டு பெரிதாக எழுதச் செய்து பல்லாவரம் மறைமலையடிகள் கலைமன்றத்தில் புலவர் படங்களோடு அணிபெற அமைக்கப் பெற்றிருக் கின்றது.

## ௫. என்றி பவர் (1812 - 1885)

மதுரை அமெரிக்க மிசன் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகவிருந்து இப்போது இறையியற் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராக விருக்கும் என் கெழுதகை நண்பர் திரு. வீ. ப. கா. சுந்தரம், எம். ஏ. அவர்கட்கு அமெரிக்க மிசனைச் சேர்ந்த டாக்டர் வின்சுலோ, என்றி பவர் ஆகியோர் உருவப் படங்களைத் தேடிப் பெற்றுத் தருமாறு பல முறை எழுதியுள்ளேன். அவர்கள் அண்மையில் 1967 இல் தவத்திரு சபாபதி குலேந்திரன் அவர்கள் எழுதிய 'கிறித்தவ வேதாகமத்தின் வரலாறு' என்ற நூலில் என்றி பவர் படம் இருப்பதாகத் தெரிவித்து அதனை எனக்கனுப்பிப் பெருமகிழ் வூட்டினார்கள்.

பீற்றர் பெர்சிவல் சைவப் பெரும்புலவர் யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் துணைகொண்டு விவிலிய நூலை மொழி பெயர்த்து வெளியிட்டார். அம் மொழிபெயர்ப்பு சென்னையிலுள்ள கிறித்தவ சமய அறிஞர் சிலர்க்குப் பிடிக்கவில்லை. எனவே என்றி பவரைக் கொண்டு வேறு மொழிப்பெயர்ப்பினைச் செய்தல் வேண்டுமென்று அவரிடம் அவ்வேலை ஒப்படைக்கப்பெற்றது. 1861 இல் அவர் பாளையங்கோட்டைக்குச் சென்று டாக்டர் கார்டுவெல், சார்சண்ட் ஐயர், மதுரை திரேசி ஆகியோர் உதவியுடன் விவிலிய நூல் மொழிபெயர்ப்பினைச் செய்தார். சென்னையிலிருந்து டாக்டர் வின்சுலோ தம் கருத்துக்களைக் கடிதமூலம் தெரிவித்து வந்தனர். எனவே அவருடைய கடிதங்கள் பாளையங் கோட்டை டயோசிசு அலுவலகத்தில் கிடைக்கப்பெறும் என்ற நம்பிக்கையோடு முயன்று வருகின்றேன். திருபவர் பவணந்தி முனிவர் நன்னூலின் பாயிரத்தை மட்டும் ஆங்கிலத்திலே மொழிபெயர்த்துத் தமிழும் ஆங்கிலமுமாக வெளியிட்டுள்ளார். அஃது இப்போது கழகவழி அழகிய பதிப்பாக வெளியிடப் பெற்றிருக்கிறது. 1868இல் சீவக சிந்தாமணி நாமகள் இலம்பகத்தை நச்சினார்க்கினியர் உரையோடு பதிப்பித்துள்ளார். டாக்டர் சாமிநாதையர் சீவக சிந்தாமணி நச்சினார்க்கினியர் உரையினை வெளியிடுவதற்கு முன் வெளியிட்டுப் பெருமை தேடிக்கொண்டார் என்றி பவர்!

## ௬. பீற்றர் பெர்சிவல்

அவர் 1826 ஆம் ஆண்டில் யாழ்ப்பாணத்துக்கு வந்தார். நல்லூர் ஆறுமுக நாவலர் அவர்களிடம் தமிழ் பயின்றார். அவர் தம் ஆசிரியரைக் கொண்டு திருப்புதலை (விவிலிய நூலை) மொழிபெயர்க்கச் செய்தார். 1848 ஆம் ஆண்டில் திருப்புதல்

வேலை முற்றுப்பெற்றதும் அதனை அச்சிடுவதற்குச் சென்னைக்குச் சென்றார். அடுத்து ஆறுமுக நாவலரவர்களும் சென்னைக்குச் சென்றதாகத் தெரிகிறது. 1850 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் அத் திருப்புதல் வெளியிடப்பெற்றது. இவர் தொகுத்தெழுதி அச்சிட்ட 'ஆங்கிலத் தமிழ் அகர முதலி' பல பதிப்புக்களைப் பெற்றுத் தமிழ்நாட்டிலே நன்கு பயன்படுத்தப்பெறுகின்றது. அவர் தமிழில் வழங்கும் பழமொழிகளையெல்லாந் தொகுத்து ஆங்கில மொழிபெயர்ப்புடன் "ஆங்கிலத் தமிழ்ப் பழமொழி அகர வரிசை" என்ற நூலை வெளியிட்டுள்ளார். அவர் 1851 இல் இங்கிலாந்துக்குச் சென்று திரும்பியபின் சென்னையில் புதிதாக நிறுவப்பட்ட பல்கலைக் கழகத்தில் கீழைநாட்டுக் கலைகளுக்குப் பேராசிரிய (Professor of Oriental Studies) ராக அமர்த்தப்பெற்றார். அவர் உருவப்படம் சென்னைப் பல்கலைக் கழகத்திலே இருக்கிறது. அதைக் கொண்டு படம் பிடிக்கப்பட்டதே கழகத்தி லிருப்பது.

எ. **யோவான் மர்டாக்**

1868 ஆம் ஆண்டுவரை அச்சிடப்பெற்ற தமிழ் நூல்கட்கு முதன்முதல் இனவாரியாக விவரணப் பட்டி (A Classified Catalogue of Tamil Books) யலை அச்சிட்டவர். அதன்கண் தமிழ் நூல்கள் தோன்றிய வரலாற்றையும் தமிழில் அச்சுக் கலை தோன்றிய வரலாற்றையும் ஆங்கிலத்தில் விரிவாக எழுதியுள்ளார். இப்போது அஃது அரசு வெளியீடாக அச்சிடப்பெற்றுள்ளது. அவருடைய படம் சென்னை, கிறித்தவ இலக்கியக் கழகத் (Christian Literature Society) தில் இருப்பது தெரிந்து அதன் மேலாளர் இசைவுடன் அதனைப் பெற்றுப் படப்பிடிப்பகத்திலே கொடுத்துப் படம் எடுக்கப் பெற்றது.

அ **துரு ஐயர் (Drew)**

அவர் பழம்புலவர் இராமாநுசக் கவிராயரிடம் தமிழ் பயின்றார். 1840-இல் அவர் திருக்குறள் முதல் 63 அதிகாரங்களை மட்டும் ஆங்கில உரைநடையில் மொழிபெயர்த்துத் தம் ஆசிரியர் எழுதிய திருக்குறள் உரை நூலில் பின்னிணைப்பாகச் சேர்த்துள்ளார். அவருடைய படத்தை வேப்பேரியிலுள்ள பெண்டிக் மகளிர் உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியரும் தூத்துக்குடி வழக்குரைஞர் ஏ. சி. பால் நாடார் அவர்களின் திருமகளாருமான செல்வி திலகவதி பால் அவர்கள் இங்கிலாந் திலிருந்து தருவித்துத் தந்தனர்.

௯. யோவான் லாசரசு

தவத்திரு துரு ஐயர் மொழிபெயர்த்த திருக்குறள் 63 அதிகாரங்களுக்கு மேலுள்ள 70 அதிகாரங்களை ஆங்கில உரைநடையில் மொழிபெயர்த்துத் திருக்குறள் முழுவதுக்கும் ஆங்கில மொழிபெயர்ப்பு வரச்செய்து பெருமைபெற்ருர். அதே போல் என்றி பவர் நன்னூல் பாயிரத்துக்கு மட்டும் ஆங்கில மொழிபெயர்ப்புச் செய்து முடிக்காமல் விட்ட எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் ஆகிய இரண்டு பகுதிகட்கும் ஆங்கில மொழி பெயர்ப்புச் செய்து நன்னூல் முழுவதுக்கும் ஆங்கில மொழி பெயர்ப்பு வரச்செய்த பெருமையும் பெற்ருர். 'தமிழ் ஆங்கிலப் பழமொழி அகர வரிசை' நூல் ஒன்றையும் தொகுத்து வெளி யிட்டுள்ளார்.

அவருடைய அறிவு சான்ற பெண்மக்கள் மூவரும் தம் தந்தையார்பேரில் சென்னைப் பல்கலைக் கழகத்திலே தமிழ் ஆராய்ச்சிக்காக ஓர் அறக்கட்டளை நிறுவும்பொருட்டு ஒரு நூருயிர ரூபா வழங்கியுள்ளனர். அதன்பேரில் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையில் தமிழ் வாசகராயிருந்த திரு ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் 25-11-1948 இல் முதன்முதல் தமிழ்ப் பேராசிரியராக அமர்த்தப்பெற்ருர். அவர் பிரிவுக்குப் பின் டாக்டர் மு. வரதராசனுர் பேராசிரியராக அமர்த்தப்பெற்றனர். அவர் மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தரான பின் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி வருகின்றனர். தவத்திரு லாசரசு உருவப்படம் அவர் தம் பெண்மக்கள்வழிக் கிடைக்கப்பெற்றது.

௧0. பெப்ரிசியசு

அவர் 1779 இல் 'தமிழ் ஆங்கிலத் தமிழ் அகராதி'யை முதன்முதல் தொகுத்து வெளிப்படுத்தினர். அதிற் காணப் படும் தமிழ் எழுத்துக்கள் மரக்கட்டையிலும் ஆங்கில எழுத்துக்கள் ஈயத்திலும் செய்யப்பட்டனவாகும். 1786 இல் ஆங்கிலத் தமிழ் அகராதியையும் முதன்முதல் வெளியிட்ட பெருமை அவருக்கே யுரியது. தமிழ் ஆங்கில அகராதி முகப்பில் 'The Malabar English Dictionary' என்று ஆங்கி லத்திலே அச்சிடப் பட்டுள்ளது. தமிழ் மொழியை ஐரோப் பியர் மலபார் மொழி (Malabar Language) என்றே பொதுவாகக் கூறிவந்தனர். மேற்குக் கடற்கரைப் பக்கம் வந்திறங்கிய மேலை நாட்டினர் அங்கே வழங்கிவந்த மொழிக்கும் தமிழ் மொழிக்கும் வேறுபாடு கண்டிலர் என்பது தெள்ளத் தெளிய விளங்கு

கின்றது. அவருடைய படம் சென்னை வேப்பேரி டயோசிசன் அச்சகத்திலிருப்பதறியலானேன். அதன் மேலாளரைக் கேட்கவே அவர் தம்மிடமுள்ள செப்புப்பட அச்சுக்கட்டை (Halftone Block) யினைக் கொண்டு அச்சிடப் பெற்ற படம் ஒன்றை அனுப்பி யுதவினர். அதைக் கொண்டு ஓவியர் பெரிய அளவில் படம் வரைந்து கொடுத்தனர்.

கக. கிரியர்சன்

இந்திய மொழிகளை யெல்லாம் மதிப்பீடு செய்து 'Linguistic Survey of India' என்ற தலைப்பில் 1927 இல் 11 தொகுதிகளை அச்சிட்டு வெளியிட்டனர். அதன் 4 ஆவது தொகுதியின்கண் திராவிட மொழிகளைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்கள் இருக்கின்றன. இரண்டாவது பதிப்பாக அதனை வாரணாசியிலுள்ள 'மோத்திலால் பனார்சிதாசு' என்னும் பதிப்பகத்தார் வெளியிட்டுள்ளனர். அத்தொகுதிகளை மொழிப் பேரறிஞர் ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கட்கு அண்மையில் வரவழைத்துக் கொடுத்தேன். திரு கிரியர்சன் படம் கல்கத்தா விலுள்ள நாட்டுப் பொதுமை நூலகத் (National Public Library) தில் இருப்பது தெரியவே அதனைப் படம் பிடித்து அனுப்புவதற்குரிய செலவு தொகையினை அனுப்பயின் படம் கிடைக்கப் பெற்றது.

கஉ. தர்ஃச்டன்

சென்னை ஆவணக் காப்பகத்தில் 1885 முதல் 1908 வரை கண்காணிப்பாளராக விருந்தார். அவர் 1909 இல் தென்னிந் தியக் குலங்களும் குடிகளும் (Castes and Tribes of Southern India) என்னுந் தலைப்பில் ஏழு தொகுதிகளைப் படங்களோடு வெளியிட்டார். அவருடைய சிறந்தமுயற்சி பெரிதும் போற்றுதற் குரியது அவருடைய படம் சென்னை அரும் பொருட்காட்சிக் கையேடு (Museum Hand - book) என்ற நூலிலிருந்து கிடைக்கப் பெற்றது.

கங. டாக்டர் கிரால்

அவர் திருக்குறளை இலத்தீன் மொழியிலும் செருமன் மொழியிலும் மொழி பெயர்த்தவர். 'கைவல்ய நவநீதம்' என்ற வேதாந்த நூலை 1855 இல் ஆங்கிலத்திலும், 1854 இல் செருமன் மொழியிலும் மொழி பெயர்த்துள்ளனர். இவ்விரண்டும் டாக்டர் போப் அவர்களை மிகவும் கவர்ந்த நூல்களாகும். தமிழ் இலக் கணத்தை மேலை நாட்டினர்க்குச் சுருங்கச் சொல்லி விளங்க

வைத்தல் வேண்டுமென்று கருதித் 'தமிழ் இலக்கணச் சுருக்கம்' (Outline of Tamil Grammar) என்ற நூலை எழுதி வெளியிட்டுள்ளார். அவருடைய படம் 'தரங்கை மிசியோன் சரித்திரம்' என்ற நூலிலிருந்து கிடைக்கப் பெற்றது.

௧௪. சாமுயேல் எஃப் கிறீன்

ஆங்கிலத்திலுள்ள Human Anatomyயை 'மனுஷவங்காதிபாதம்' என்று தானியேல் சாப்மென் என்பவர் தமிழில் மொழி பெயர்த்ததையும் Surgery யை 'இரண வைத்தியம்' என்று சோசுவா டன்வர்த் என்பவர் தமிழில் மொழிபெயர்த்ததையும், Hoopers Physician's Vademecum என்ற ஆங்கில நூலை 'வைத்தியாகரம்' என்று வில்லியம் பவுல் தமிழில் மொழிபெயர்த்ததையும் திருத்தஞ் செய்து விளக்கப் படங்களோடு அச்சிட்டு வெளியிட்ட டாக்டர் கிறீன் அவர்கள் உருவப்படம் யாழ்ப்பாணத்தில் வெளியிட்ட இலங்கைத் தமிழ்விழா மலரினின்றும் கிடைக்கப் பெற்றது. மேற்கண்ட மூன்று நூல்கள் 1872, 1867, 1872 ஆகிய ஆண்டுகளில் முறையே அச்சிடப் பெற்றுள்ளன. அவை மூன்றும் மறைமலையடிகள் நூல் நிலையத்தில் இடம் பெற்றுத் "தமிழில் முடியுமா?" என்று ஐயுற்றுக் கேட்பவர்கட்கு விடை கூறி வருகின்றன.

௧௫. சீகன்பால்க் (1683 - 1719)

அவர் செருமனியிலிருந்து 1709 இல் தரங்கம்பாடிக்கு வந்தனர். 'தமிழ் இலத்தீன் இலக்கணத்தை'யும், 'தமிழ் இலத்தீன் அகராதியை'யும் அச்சிட்டவர். தமிழ் அச்சுப் பொறியினை முதன் முதலாக 1712 இல் தரங்கம்பாடியில் நிறுவியவர். அவருடைய படம் தரங்கை மிசியோன் சரித்திர நூலிலிருந்து கிடைக்கப்பெற்றது.

௧௬. சே. எசு. சாண்டலர்

வின்சுலோ அகராதியையும் டாக்டர் போப் தொகுத்து வைத்திருந்த அகராதிச் சொற்களையும் சேர்த்து விரிவான தமிழ்ப் பேரகராதியை உருவாக்குவதற்குச் சென்னைப் பல்கலைக் கழகத்தாரால் 1911 இல் அதன் முதல் ஆசிரியராக அமர்த்தப் பெற்றார். 1921 இல் அவர் அப்பதவியிலிருந்து விலகும்வரை பேரகராதியை அச்சுக் கோக்கக் கொடுப்பதற்கு ஆயத்தஞ் செய்தார். அவர் படம் நண்பர் ஒருவர்வழிக் கிடைத்தது.

கஎ. தவத்திரு ஈராசு பாதிரியார்

அவர் பம்பாய்க் கிறித்தவக் கல்லூரியில் பேராசிரியராக விருந்தார். சிந்து நதிக்கரை நாகரிகத்தைப்பற்றி ஆராய்ந்து நூல்களும் கட்டுரைகளும் எழுதியுள்ளார். அங்கே காணப் படுவது திராவிட நாகரிகமே என்பது அவருடைய முடிபு. 1938இல் திராவிடர் பண்பாடு (Dravidian Culture) என்ற தலைப்பில் 'ஆங்கில முத்திங்கள் வெளியீடு' ஒன்றைக் கழக வழி வெளியிட வேண்டுமென்று அறிக்கை அச்சிட்டு அறிஞர் கட்கு அனுப்பிவைக்கப் பெற்றது. அறிஞர் சிலர் கட்டுரை களும் அனுப்பிவைத்தனர். தவத்திரு ஈராசு பாதிரியார் அவர்கள் தமது கட்டுரையோடு தமது உருவப்படத்தையும் அனுப்பிவைத்தனர் அப்போதுள்ள சூழ்நிலையில் ஆங்கில இதழை நடத்துவது மிகக் கடினமாகும் எனக் கருதித் தொடங்குவது கைவிடப்பட்டது.

கஅ. கில்பர்ட் சிலேட்டர்

அவர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் 1912 முதல் 1922 வரை இந்தியப் பொருளியல் துறைப் பேராசிரியராக விருந்தார். இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்பு (Dravidian Elements in Indian Culture) என்ற நூலை ஆங்கிலத்திலே எழுதியுள்ளனர். அதனைப் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் 'இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்பு' என்ற தலைப்பில் தமிழிலே மொழிபெயர்த்துள்ளார். அது கழகவழி வெளியிடப்பட்டுள்ளது. அவருடைய உருவப் படம் சென்னைப் பல்கலைக் கழகத்திலே இருக்கிறது. அதி லிருந்து படப்பிடிப்பாளரைக் கொண்டு வேறுபடம் எடுத்துக் கொள்ளப்பட்டது.

கக. தவத்திரு பாப்ளி துரை

அவர் 1924இல் மதுரைக் கிறித்தவ இளைஞர் சங்கத்தின் பொதுச் செயலாளராக விருந்தார். அவர் திருக்குறளை ஆங் கிலத்திலே மொழிபெயர்த்துள்ளார். 1924 இல் கழகம் முதன் முதல் திருக்குறள் மூலத்தை 9 ✕ 13 செ.மீ. அளவில் அழகா கவுங் கவர்ச்சியாகவுங் கையடக்கமாகவும் மிகவுங் குறைந்த 25 காசு விலை வைத்து அச்சிட்டு வெளியிட்டது. தாளுறைக்கட் டுடையது விலை 25 காசு. துணிக்கட்டடமுடையது விலை 50 காசு. பஞ்சு வைத்து உயர்ந்த ரெக்சைனுல் கட்டப் பெற்றது விலை ரூ. 1—50. பின்னது விவிலிய நூலைப் போன்று அமைந்து காண்பவர் கண்களைக் கவர்ந்தது. அதனைப் பெற்றுக் களிபேருவகையடைந்த தவத்திரு பாப்ளி

துரை கிறித்தவ சமய ஆங்கில இதழ்கள் நான்கிற்கு ஆங்கிலத் திலே மதிப்புரை எழுதியனுப்பி வைத்தனர். அம்மதிப்புரை யின் படி ஒன்றும், தமது உருவப்படம் ஒன்றும் எழுதிக் கேட்டுப் பெற்றேன். அவர் எழுதிய மதிப்புரையில் ஒரு பகுதி தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. அது வருமாறு :

"தமிழ் நூல்கள் பதிக்கப் பெறத் தொடங்கிய காலந் தொட்டு அழியாப் பெரும்புகழ் படைத்த அரிய நூலாகிய திருக் குறள்—அதன் சிறப்பிற்கேற்ப—அழகிய பதிப்பினைப் பெற் றுள்ளதென்பது இதுவே முதன் முறையாகும்.

திருத்தமான அச்சும், கண்கவர் வனப்பு மிக்க கையடக்க மான அளவில் இப் பதிப்பினைக் கொண்டுவந்ததால் இச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் உலகிற்கு உவந்தளித்தொரு பெரிய நன்மையை விளைத்ததென்பது நன்கு போதரும்".

—பாப்ளி 3-10-1924.

மேலே குறிப்பிட்டுள்ள மேலைநாட்டுக் கிறித்தவத் தமிழ் அறிஞர்களின் படங்களைத் தேடித் தொகுப்பதற்கு எத்துணை விடாப்பிடியான முயற்சி, எத்துணை நேரப் போக்கு, எத்துணைப் பொருட்செலவு ஏற்பட்டுள்ளன என்பதை அன்பர்கள் எண்ணிப் பார்த்தல் வேண்டுமென்பதற்காகவே இக்கட்டுரை விளக்கமாக எழுதப் பெற்றது.

திருக்குறளில் முதல் 13 அதிகாரங்களை ஆங்கிலத்திலே மொழிபெயர்த்த எல்லிசு, தமிழ் இலக்கணத்தை ஆங்கிலத்தில் எழுதிய இரேனியசு, தமிழ் ஆங்கில அகராதி எழுதிய ராட்லர், நீதிநெறி விளக்கத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த எச். ஸ்டோக்சு, வெற்றிவேற்கையினை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த தெய்லர், சிவஞானபோதம், சிவப்பிரகாசம் ஆகிய வற்றை மொழிபெயர்த்த கோசிங்டன், தமிழ் ஆங்கில அகராதி, ஆங்கிலம் தமிழ் அகராதி ஆகியவற்றை இயற்றிய லெவி சுபால்டிங், பாவலர் சரித்திர தீபகம் இயற்றிய சே. ஆர். ஆர்னல்டு, தருக்க சாத்திரம் (நியாய இலக்கணம்) இயற்றிய வில்லியம் நெவின்சு, தமிழ் ஆங்கிலப் பழமொழி அகரவரிசை தொகுத்து வெளியிட்ட சென்சன், தென்னிந்தியக் கதைகளும் பாக்களும் (Tales and Poems of South India) என்ற நூலை எழுதிய எட்வர்டு சூவிட் இராபின்சன், தென்னிந்திய நாடோடிப் பாடல் களைத் தொகுத்து ஆங்கிலத்தில் விளக்கத்தோடு மொழி பெயர்த்தெழுதிய சார்லசு இ. கோவர் ஆகியோர் உருவப் படங்களைப் பெறுவதற்குச் செய்யும் முயற்சி வெற்றிபெறும் என்ற நம்பிக்கையுடையேன். 'முயற்சி திருவினையாக்கும்'.

—வ. சுப்பையா

# சங்க இலக்கியத்தில் எருவையும் பாறும்

## (The Black Vulture and The White Backed Vulture)

[திரு. பி. எல். சாமி, பி.எஸ்ஸி.,]

பிணத்தையே தின்று வாழும் கழுகுகளில் நான்கு வகைக் கழுகுகள் தமிழ்நாட்டில் உள்ளன. அவைகளில் இரண்டு வகைகள் முக்கியமானவை. இந்த இரண்டு வகைக் கழுகிற்கும் கழுத்திலும் தலையிலும் மயிர்களோ, தூவிகளோ கிடையா. தலை மொட்டையாகத் தெரியும். இந்த இரண்டு வகையில் ஒருவகைக் கழுகிற்குத் தலையும் கழுத்தும் சிவப்பாக இருக்கும். மற்றொரு வகைக் கழுகிற்குத் தலையும் கழுத்தும் காரீய நிறமாக இருக்கும். சிவந்த தலையுடைய பிணந் தின்னிக் கழுகை 'எருவை' யென்றும், காரீய நிறத் தலையுடைய பிணந் தின்னிக் கழுகைப் 'பாறு' என்றும் சங்கநூல்கள் கூறுகின்றன. எருவை என்ற பிணந்தின்னிக் கழுகைப்பற்றிப் பல சங்கப் பாடல்கள் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும். எருவையின் சிவந்த காதையும், எருவை பிணந்தின்னுவதைப் பற்றியும் பல பாடல்கள் கூறுகின்றன. எருவையின் சிவந்த செவியை வர்ணித்துள்ள பாடல்களைக் கொண்டு பிணந்தின்னிக் கழுகு களில் இக்கழுகு எது என்று தெளிவாக அறிந்துகொள்ளலாம்.

> "அத்தக் கேழல் அட்ட நற்கோள்
> செந்நாய் ஏற்றை கதுமென ஈர்ப்பக்
> குருதி யாரும் எருவைச் செஞ்செவி
> மண்டம ரழுவத் தெல்லிக் கொண்ட
> புண்தேர் விளக்கின் தோன்றும்
> விண்தோய் பிறங்கல் மலையிறந் தோரே"
>
> —அகம் 111

> "நீளெரி பரந்த நெடுந்தா ளியாத்துப்
> போழ்வளி முழங்கும் புல்லென் உயர்சினை
> முடைநசை இருக்கைப் பெடைமுகம் நோக்கி
> ஊன்பதித் தன்ன வெருவரு செஞ்செவி
> எருவைச் சேவல் கரிபுசிறை தீய
> வேனில் நீடிய வேயுயர் நனந்தலை"
>
> —அகம். 51

> "பொருகளத்து ஒழிந்த குருதிச் செவ்வாய்ப்
> பொறித்த போலும் வானிற எருத்தின்

அணிந்த போலுஞ் செஞ்செவி எருவை
குறும்பொறை எழுந்த நெடுந்தாள் யாஅத்து
அருங்கவட் டுயர்சினைப் பிள்ளை யூட்ட
விரைந்துவாய் வழுக்கிய கொழுங்கண் ஊன்தடி
தொல்பசி முதுநரி வல்சி யாகும்'' —அகம். 193

''எருவை யிருஞ்சிறை யிரீஇய விரியிணர்த்
தாதுண் தும்பி முரலிசை கடுப்பப்'' —அகம். 291

''சிறுகுடி மறவர் சேக்கோள் தண்ணுமைக்கு
எருவைச் சேவல் இருஞ்சிறை பெயர்க்கும்'' —அகம். 297

''இருசிறக ரீர்க்குப் பரப்பி யெருவை
குருதி பிணங்கவருந் தோற்றம்'' —களவழி. 20

''உலறுகுடை வம்பல ருயர்மர மேறி
யேறுவேட் டெழுந்த வினந்தீ ரெருவை
யாடுசெவி நோக்கு மத்தம் பணைத்தோட்'' —அகம். 285

''நெய்த்தோ ரன்ன செவிய வெருவை
கற்புடை மருங்கிற் கடுமுடை யார்க்கும்
காடுநனி கடிய வென்ப'' —ஐங்குறுநூறு. 335

''மாவு மாக்களும் படுபிண முணீஇயர்
பொறித்த போலும் புள்ளி யெருத்திற்
புன்புற வெருவைப் பெடைபுணர் சேவல்''
—பதிற்றுப்பத்து 36 : 7-9

எருவையின் சிவந்த காதையும் கரிய சிறகையும் வெண்மை கலந்த கழுத்தையும் மேலே காட்டிய சங்கப் பாடல்கள் விளக்கியுள்ளன. எருவையின் சிவந்த செவி போர்க்களத்திலே வீரரது புண்ணை ஆராய்தற்கு இரவிலே வைத்த விளக்குப்போல் தோன்றும் என்று கூறப்பட்டுள்ளது. எருவை என்ற பிணந்தின்னிக் கழுகின் காது சிவப்பாக இலை போலத் தொங்கும். இஃது அகல்விளக்கின் சிவந்த சுடருக்கு உருவத்தையும் நிறத்தையும் கருதி ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது. நெருப்புப் போன்ற செவி என்று நற்றிணை கூறுகின்றது. ஊன்துண்டைத் தலையில் பதித்தாற்போல இருக்கும் பயத்தைத் தரும் செஞ்செவி என்று அகநானூறு (51) கூறுகின்றது. இந்த விளக்கம் மிக அழகான பொருத்தமான விளக்கமாகும். அகநானூறு 193ஆம் பாடலில் 'பொறித்த போலும் வானிற எருத்தின் அணிந்தபோலும் செஞ்செவி யெருவை' என்று எருவையின் கழுத்தும் செவியும் வர்ணிக்கப்

பட்டுள்ளது. எருவையின் தலையும் கழுத்தும் இறகுகள் இல்லாமல் வழுக்கையாய்ப் புதிதாக வெட்டப்பட்ட விலங்கின் இறைச்சியைப்போலக் காணப்படும். அதிலும் காது மிகச் சிவப்பாக ஊன்போலக் காணப்படும். அதனால் ஊன் பதித்தது போல இருக்கும் என்று அகநானூறு கூறியுள்ளது. ஒரு வேட்டையாளர் இதை மாட்டிறைச்சியின் நிறம் (Beaf steak red) என்று வர்ணித்துள்ளார். இதன் சிவந்த கழுத்தடியில் வெள்ளைப் பொறிகள் காணப்படும். இதையே 'பொறித்தபோலும் வால் நிற எருத்து' என்று அகநானூறு கூறியுள்ளது. பொறித்த போலும் புள்ளி யெருத்து என்று பதிற்றுப்பத்து கூறியுள்ளது. இந்த எருத்தில் சிவந்து தொங்கும் காது அணிந்ததுபோல இருந்ததாகக் கூறியுள்ளது, நல்ல விளக்கமாகும். தொங்கிய காது ஆடுவதை மறவர்கள் மரத்திலிருந்து பார்த்ததாக அகநானூறு கூறியுள்ளது. இரத்தம் போன்ற சிவந்த செவியுடைய எருவை என்று ஐங்குறுநூறு கூறியுள்ளது. செஞ்செவி யெருவை என்ற வழக்கு பல பாடல்களில் பயில்கின்றது. பறவையினத்தில் இலைபோன்று தொங்கும் காது காண்பதரிதாகையால் இதன் காதையே பல பாடல்களில் வர்ணித்துள்ளனர். இலையைப் போலக் காது தொங்குவதால் எருவையைக் காதிலைக்காரன் என்று மலையாளத்தில் அழைக்கின்றனர். இத்தகைய காது போன்ற தோல் வான்கோழிக்கு இருப்பதைக் காணலாம். தலை சிவந்து மயிரற்ற பிணந்தின்னிக் கழுகை நன்கு அறிந்த சங்கப் புலவர்கள் பல பாடல்களில் வர்ணித்துள்ளனர். இதன் உடல் கரியதாய் இருக்கும். சிறகும் கருமையாய் இருக்கும். 'கரிபு சிறை' உடைய எருவை என்றும், 'இருஞ்சிறை', 'இரு சிறகர்' என்றும் இதன் கருமையான இறக்கையைக் குறிப்பிட்டுப் பாடியுள்ளனர். இதன் சிறகின் ஈர்க்கு ஓரத்தில் நன்கு தெரியுமாதலால் ''இருசிறகரீர்க்குப் பரப்பி'' என்று களவழி நாற்பது தெளிவாகக் கூறியுள்ளது. எருவை மற்றப் பறவைகளைப் பார்க்கில் மிகப் பெரிய பறவையாகும். அகநானூற்றில் (97) 'பெருந்தலை எருவை' என்று கூறியிருப்பதைக் காணலாம். காது என்று சொல்லப்படுவது காதுத்துளைக்குக் கீழ் உள்ள சிவந்த தோலே (Wattles) யாகும். (A huge vulture identified by its deep yellowish red naked head and neck, thighs and legs. White patches at base of neck - Bare skin of head and neck, deep yellowish red and wattles redder)

எருவையின் காதுத்தோல், கழுத்து, தலை முதலியவற்றை விட மிகச் சிவப்பாக இருக்கும். சங்கநூல்களில் கூறப்பட்ட

எருவை பிணந்தின்னிக் கழுகு என்று இடைக்காலத்து உரை ஆசிரியர்கள் உணரவில்லை. புறநானூற்றிற்கு உரை எழுதியவர் தலை வெளுத்து உடல் சிவந்திருக்கும் பருந்து என்று எழுதினர். தக்கயாகப் பரணி உரையாசிரியர் கழுகு என்று கூறினர். அகநானூற்று உரையாசிரியர் பருந்தின் விசேடமென்றும் வெள்ளிய தலையையுடையது என்றும் எழுதினர். இந்த உரைகள் தவருனவையாகும். தலை வெளுத்து உடல் சிவந்திருக்கும் பருந்து கருடனேயாகும். கருடனுக்குச் சிவந்த செவியில்லை. கரிய சிறகுகளில்லை. சங்க நூல்கள் கூறும் வர்ணனை கருடனுக்குச் சிறிதும் பொருந்தாது. எருவை வேறு கருடன் வேறு என்பதை நன்குணர்ந்த களவழி இரண்டையும் வேறுபடுத்திக் கூறியுள்ளது.

"எவ்வாயு மோடி வயவர் துணித்திட்ட
கைவாயிற் கொண்டெழுந்த செஞ்செவிப் புன்சேவல்
ஐவாய் வயநாகங் கவ்வி விசும்பிவரும்
செவ்வா யுவணத்திற் றேன்றும் புனல்நாடன்
தெவ்வரை யட்ட களத்து" —களவழி 26.

வீரர்கள் துணித்த கைகளை வாயில் கொண்டுபோகும் செஞ்செவியுடைய புல்லிய எருவைச் சேவல் ஐந்து தலை நாகத்தை எடுத்துச் சென்ற கருடன்போலத் தோன்றிற்று என்று களவழி கூறுவதைக் காணலாம். எருவையுடன் பருந்தும் கழுகும் தனித்தனியே ஒரே புறப்பாட்டில் கூறப்பட்டுள்ளதையும் காணலாம்.

"உழிஞ்சிலங் கவட்டிடை யிருந்த பருந்தின்
பெடைபயிர் குரலொ டிசைக்கு மாங்கட்
........................ ......................
............................................
............................................
இனத்தடி விராய வரிக்குட ரடைச்சி
அழுகுரல் பேய்மக ளயரக் கழுகொடு
செஞ்செவி யெருவை திரிதரும்
அஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே" —புறம். 370

ஒரே புறநானூற்றுப் பாடலில் பருந்தும் கழுகும் எருவையும் தனித்தனியே கூறப்பட்டிருப்பதால் எருவையானது பருந்தோ கழுகோ அன்று என்பது தெளிவாகும். எருவை பிணத்தையே தின்று வாழும். பருந்தும் கழுகும் பிணத்தைத் தின்னுமாயினும் அவைகளின் முக்கிய உணவு கழிவுப்பொருள்களும் சில சிறு விலங்குகளும் பறவைகளுமாகும்.

மற்றும் சங்கநூல்களில் எருவையைக் கரிய வழியுடைய காடுகளிலும் பாலையிலும், வறட்சியான இடங்களிலும் கூறியிருப்பது கருடப் பருந்துக்குப் பொருந்தாது. கருடப் பருந்துக்கு நீர் நிலைகள் அருகில் இருக்கவேண்டும். சங்க நூல்களில் எருவை பிணந்தின்னுவதைப் பல பாடல்கள் கூறியிருந்தும் பிணந்தின்னிக் கழுகை மறந்து கருடப்பருந்து என்று எப்படி உரை கூறினரென்று தெரியவில்லை. சங்கப் பாடல்கள் பெரும்பாலும் எருவை பிணந்தின்னுவதையே கூறியுள்ளன.

"கொடுமரம் பிடித்த கோடா வன்கண்
வடிநவில் அம்பின் ஏவ லாடவர்
ஆளழித் துயிர்த்த அஞ்சுவரு பதுக்கைக்
கூர் நுதிச் செவ்வாய் எருவைச் சேவல்
படுபிணப் பைந்தலை தொடுவன குழீஇ
மல்லன் மொசிவிரல் ஒற்றி மணிகொண்டு
வல்வாய்ப் பேடைக்குச் சொரியும் ஆங்கண்" —அகம். 215

"குருதி யாடிய புலவுநா றிருஞ்சிறை
எருவைச் சேவல் ஈண்டுகிளைத் தொழுதி
பச்சூன் கொள்ளை சாற்றிப் பறைநிவந்து
செக்கர் வானின் விசும்பணி கொள்ளும்
அருஞ்சுரம் நீந்திய நம்மினும் பொருந்தார்" —அகம். 387

"உயிர்திறம் பெயர நல்லமர்க் கடந்த
தறுக ணாளர் குடர்தரீஇத் தெறுவரச்
செஞ்செவி யெருவை அஞ்சுவர விகுக்கும்" —அகம். 77

"கருங்கா லோமைக் காண்பின் பெருஞ்சினைக்
கடியுடை நனந்தலை யீன்றிளைப் பட்ட
கொடுவாய்ப் பேடைக் கல்கிரை தரீஇய
மான்றுவேட் டெழுந்த செஞ்செவி யெருவை
வான்றோய் சிமைய விறல்வரைக் கவாஅன்
துளங்குநடை மரையா வலம்படத் தொலைச்சி
யொண்செங் குருதி யுவறியுண் டருந்துபு
புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை
கொள்ளை மாந்தரி னுனது கவரும்
புல்லிலை மராஅத்த வகன்சே ணத்தம்" —அகம். 3

"புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை
யிரவுக்குறும் பலற நூறி நிரைபகுத்

திருங்கன் முடுக்கர்த் திற்றி கெண்டுங்
கொலைவி லாடவர் போலப் பலவுடன்
பெருந்தலை யெருவையொடு பருந்துவந் திருக்கு
மருஞ்சுர மிறந்த கொடியோர்க் கல்கலும்'' —அகம். 97

கொன்று போட்ட ஆளின் பிணத்தைத் தின்னும் எருவையைப்பற்றி அகநானூறு கூறியுள்ளது. பிணத்தின் தலையைத் தோண்டி உண்ணகுழுமிக் கண்ணை எடுத்துப் பேடைக்குச் சொரிந்ததாக அகநானூறு கூறியுள்ளது. பிணந்தின்னிக் கழுகுகள் பிணத்தைத் தின்னும்போது தோண்டித் தசையையும் தின்னும் வழக்கத்தை வேட்டையாளர் எழுதியுள்ளனர். எருவை கூட்டமாகப் பிணத்தைச்சுற்றி இருப்பதையும் கூறியுள்ளனர். எருவைகள் குழுமியும் கிளைத் தொழுதியாகவும் பச்சை ஊனைக் கொள்ளையடிப்பதை அகநானூறு கூறியுள்ளது. எருவைகள் உருவில் பெரிதாயிருந்தாலும், வயிறு நிறைய உண்டாலும், உண்டதும் பறக்கக்கூடியவை என்று பறவை நூலார் கூறுவர். எருவையின் கூட்டம் ஊனைத்தின்று 'பறைநிவந்து' சென்றதாகவும் அப்போது செக்கர் வானம் போல விசும்பு அணி கொண்டதாகவும் கூறியதைக் காணலாம். எருவையின் தலை, கழுத்து, கால் ஆகியவை சிவப்பாக இருப்பதால் எருவைக் கூட்டம் வானில் செல்வது செக்கர் வானம் போலிருந்ததாக ஒரு புலவர் மிக அழகாகக் கூறியுள்ளார். போர்க்களத்தில் இறந்தவருடைய குடலை எருவை இழுத்துத் தின்பதாகவும் கூறியுள்ளனர். முட்டையிட்டுக் குஞ்சு பொரித்த தன்னுடைய பெட்டைக்கு உணவு தருவதற்காகப் புலி கொன்று போட்டுத் தின்றுவிட்டுச் சென்ற மரையாவின் கெடுநாற்ற மடிக்கும் தசையைக் கொள்ளையடிக்கும் மாந்தரைப்போல் ஓயாது கவர்ந்து செல்லும் எருவை என்று அகநானூற்று மூன்ரும் பாட்டுக் கூறியுள்ளது. புலிவிட்டுச் சென்ற முடை நாற்றம் அடிக்கும் விடக்கூனைப் பெருந்தலை எருவை பருந்துடன் உண்ணவிருக்கும் என்று மற்ரோர் அகநானூற்றுச் செய்யுள் கூறியுள்ளது. புலிகள் அடித்துப் பதுக்கிய ஊனைப் பிணந்தின்னிக் கழுகுகள் வானில் உயரப் பறக்கும்போது கண்டு பிடித்து இறங்கி உண்பதை வேட்டையாளர் எழுதியுள்ளனர். புலி இந்தக் கழுகுகளை விரட்டுவதையும் கண்டுள்ளனர். வேட்டையாளர் சுட்டுப் போட்ட விலங்குகளையும் பாதுகாக்கா விட்டால் நொடியில் உண்டுதீர்த்துவிடும் பிணந்தின்னிக் கழுகுகளைப் பற்றி பலர் எழுதியுள்ளனர். இக்கழுகுகள் வானிலிருந்து இறங்குவது கொண்டு காட்டில் எங்கே பிணம் கிடக்கின்றது என்று கண்டுகொள்ளலாம். பிணத்தையே

தின்று வாழும் பறவைகளில் எருவை ஒன்ருகும். முடைநடை இருக்கை என்று அகநானூறு கூறியுள்ளது.

> " படுமுடை நசைஇய வாழ்க்கைச் செஞ்செவி
> யெருவைச் சேவ லீண்டுகிளை பயிரும்
> வெருவரு கான நீந்திப் பொருள்புரிந்து —அகம். 161

> " ஆர்த்த அறிவினர் ஆண்டிளைய ராயினுங்
> காத்தோம்பித் தம்மை அடக்குப—மூத்தோருந்
> தீத்தொழில் கன்றித் திரிதந் தெருவைபோற்
> போத்தறுர் புல்லறிவி ஞர்." —நாலடியார். 351

படுமுடை நசையுடன் கூடிய வாழ்க்கையுடைய எருவை என்று அகநானூறு கூறுவதைக் கவனிக்க வேண்டும். முதுமை அடையுந்தோறும் தீத்தொழிலான பிணத்தைத் தின்னும் தொழிலிலேயே கன்றித் திரியும் எருவை என்று நாலடியார் கூறியுள்ளது. இந்த இடத்தில் எருவை என்பதற்கு வேழம் என்றும் நாணல் என்றும் கொண்டு உள்ளே புரையுடையவர் என்று சில உரையாசிரியர் பொருள் கூறியுள்ளனர். இந்தப் பொருள் தவறு. எருவை என்பது இந்தப் பாட்டில் பிணந்தின்னிக் கழுகையே குறிக்கும். பதிற்றுப்பத்தில் " தீதுகளைந்தெஞ்சி " (74 : 12) என்று வரும் வரிக்கு உரையெழுதுங்கால் தீய பாகத்தைக் களைந்து என்று எழுதியதைக் காணலாம். அதையே பருந்தூறளப்பதாகவும் கூறியுள்ளதைக் காணலாம். கலைமானின் ஊனை உதிர்த்து மீதியிருந்ததைத் தீது என்று சொல்லியிருப்பது விடக்கூனையே யாகும். தீதைத் தின்னும் தொழிலுடையதால் எருவை தீத்தொழிலைக்கன்றி வாழ்வதாக நாலடியார் கூறிற்று. தீயதைத் தின்னும் கழுதைப்புலியை மணிமேகலை தீநாய் என்றழைப்பதையும் காணலாம். தீ என்பது பிணம், விடக்கூன் என்பவற்றைக் குறிப்பதை உணரவேண்டும். பிணத்தைத் தின்னும் கழுதைப்புலியைத் தீ நாய் என்று அழைத்தது மிகவும் பொருத்தமானது. பிணத்தை நரிகளுடனும் காக்கைகளுடனும் சேர்ந்து எருவை தின்பதை வேட்டையாளர் கண்டு கூறியுள்ளனர்.

இக்கழுகு பிணத்தைத் தின்பதற்காக நரிகளுடன் சண்டையிடுவதுண்டு. எருவை தன் பிள்ளைக்கு ஊட்டும்போது வழுக்கிவிழுந்த ஊன்தடியை முதுநரி உணவாகக் கொள்ளும் என்று அகநானூறு கூறியுள்ளது.

" கணநரி யினனொடு குழீஇ நிணனருந்து
நெய்த்தோ ராடிய மல்லன் மொசிவிர
லத்த வெருவைச் சேவல் சேர்ந்த
வரைசேர் யாத்த வெண்டிரள் வினைவிறல் "

—அகம். 375

" கணநரி திரிதரு மாங்க ணிணனருந்து
செஞ்செவி யெருவை குழீஇ
அஞ்சுவரு கிடைக்கைய களங்கிழ வோயே."

—புறம். 373.

" வம்பலர் தொலைந்த அருஞ்சுரக் கவலை
அழல்போல் செவிய சேவல் ஆட்டி
நிழலொடு கதிக்கும் நிணம்புரி முதுநரி
பச்சூன் கொள்ளை மாந்திவெய்து உற்றுத்
தேர்திகழ் வறும்புலந் துழைஇ நீர்நயந்து
பதுக்கை நீழல் ஒதுக்கிடம் பெறுஅ
அஞ்சுவரு கவலை வருதலின் வருந்திய "

—நற்றிணை. 352

கணநரியொடு நிணத்தை (கொழுப்பை) அருந்தும் செஞ்செவி யெருவை குழுமியிருந்ததாகப் புறநானூறும் அகநானூறும் கூறியுள்ளன. நெருப்புப் போன்ற செவியை யுடைய எருவைச்சேவலை ஆட்டிய நிணத்தை விரும்பும் முதுநரியை நற்றிணை கூறியுள்ளது. கணநரி எருவையுடன் பிணத்தைத் தின்பதையும் எருவையை விரட்டுவதையும் வேட்டையாளர் கூறியுள்ளனர். (Vultures will feed in company of Hyaenas, dogs and jackals. The jackal will contest with the vulture for carrion or rotting corpses. —Augustus Somerville—The passing of the Forest Gods) இன்றைய வேட்டையாளர் கூறும் செய்தியைக்கூடச் சங்கப் புலவர்கள் கண்டு கூறியிருப்பதைக் கவனிக்கவேண்டும். 'எருவை நுகர்ச்சி யூப நெடுந்தூண்' என்று புறநானூறு (224) கூறியுள்ளது. இதற்குப் பழைய உரை பருந்து வழங்குவதாகச் செய்யப்பட்ட யூபத்தூண் என்று கூறுகின்றது. இதற்கு அடிக்குறிப்பாகப் பருந்து வடிவம் செய்தற்குக் கருடசயனம் என்று பெயர் என்று கூறப்பட்டுள்ளது. இதை வைத்துக் கொண்டு சிலர் பருந்துருவில் செய்யப்பட்ட யாகத்தூண் என்று விளக்கங் கூறினர்கள். வேள்விச்சாலையில் பலியிட்ட விலங்கின் இறைச்சியை நுகரும் எருவை என்பதே பொருத்த மாகும். இங்குக் கூறப்பட்ட எருவை பருந்து அன்று, பிணந்

தின்னிக்கழுகு என்பதை உரை யெழுதினவர்கள் உணர வில்லை.

எருவையின் அலகை 'செவ்வாய்' என்றழைத்துள்ளனர். குருதி படிந்த வாயையும், குருதி ஆடிய நாற்றமடிக்கும் இருஞ்சிறகையும் கூறியுள்ளனர். இதன் அலகின் நுனி கூர்மையாயிருத்தலைக் கூர்நுதிச் செவ்வாய் என்று சொல்லப் பட்டுள்ளது. வானத்தில் பறக்கும்போது ஊனைக் கீழே கண்டால் உடனே இறங்கும் என்பதை வேட்டையாளர் கூறி யுள்ளனர்.

> " களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை
> விசும்பா டெருவை பசுந்தடி தடுப்பப் "

போர்க்களத்தில் கிடந்த புதிய ஊன்தடி விசும்பில் பறந்துகொண்டிருந்த எருவையைத் தடுத்ததாகப் புறநானூறு கூறுவதைக் கவனிக்கலாம். கடு முடையைக் காட்டில் பார்க்கும் எருவை என்று ஐங்குறுநூறு கூறுகின்றது. எருவையைத் தற்காலத்தில் தமிழில் 'பிணந்தின்னிக்கழுகு' என்றழைக்கின்றனர். இதை மலைப்போரவை என்றும் சில விடங்களில் அழைப்பர். மலைப்பேர் எருவை என்பதே மலைப் போரவை என்று மாறியிருக்கலாம். தெலுங்கு மொழியில் ''நல்ல போரவா'' என்றழைக்கின்றனர். போர்க்களத்தில் காணப்படும் எருவை என்று குறிப்பிடுவதற்குப் போர் எருவை என்றழைத்தனர் என்றும் அதுவே போரவை என்று தமிழிலும் தெலுங்கிலும் மாறி வழங்கிற்று என்றும் கொள்ளலாம். மலையிலிருந்து எருவை வருவதாகக் கருதினர். ஆனால் இந்தக் கழுகு பெரும்பாலும் இலையுதிர் காடுகளிலும் அரைப்பாலையான குறுங்காடுகளிலும் காணப்படும். எருவை என்ற பெயரும் இதன் சிவப்பு நிறத்தால் வந்தது என்பதில் ஐயமில்லை. எருமணம் என்ற சொல் குறுந்தொகையில் சிவந்த கழுநீர்ப் பூவைக் குறிப்பிடுகின்றது. எரு என்ற சொல் தெலுங்கிலும் சிவந்த நிறத்தைக் குறிக்கும். சிவப்பு நிறமான கழுகையும் ஒருவகை நாணலையும் எருவை என்ற சொல் சங்க நூல்களில் குறிப்பிடுகின்றது எருவை என்ற பெயரே சிவந்த நிறமுடைய பறவை என்பதையே குறிப்பிடுகின்றது. எருவையை ஆங்கிலத் தில் 'Black or King vulture' என்று அழைப்பர். பறவை நூலார் 'Torgos Calvus' என்றழைப்பர்.

சிவந்த பிணந்தின்னிக் கழுகைப் போலத் தமிழ் நாட்டில் வேறு சில பிணந்தின்னிக் கழுகுகளும் உண்டு. அவைகளில்

கழுத்திலே மயிரற்ற காரீய நிறமான கழுத்தையுடைய கழுகு முக்கியமானது. இதன் தலையும் கழுத்தும் உரித்துவிட்டது போன்ற வெறும் தோலோடு தோற்றமளிக்கும். எருவைக்கு இறகின்றிச் சிவந்து காணப்படுமிடத்தில் இந்தக் கழுகிற்கு மயிரற்றுக் கருமை நிறமாக உள்ளது. இந்தக் கழுகையும் சங்கப்புலவர்கள் அறிந்திருந்தனரென்று தெரிகின்றது. இந்தக் கழுகைப் பாறு என்று சங்கப்புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

" ஊறுபடு கவலைய ஆறுபல நீந்திப்
படுமுடை நசைஇய பறைநெடுங் கழுத்திற்
பாறுகிளை சேக்கும் சேட்சிமைக்
கோடுயர் பிறங்கல் மலையிறந் தோரே "

—அகம். 247

" பாறுபடப் பறைந்த பன்மாறு மருங்கின்
வேறுபடு குரல செவ்வாய்க் கூகையோடு
பிணந்தின் குறுநரி நிணந்திகழ் பல்ல
பேஎய் மகளிர் பிணந்தழூஉப் பற்றி "

—புறம். 359

" நச்சுவர் கையினிரப்ப லோம்புமதி யச்சுவரப்
பாறிறை கொண்ட பறந்தலை மாகத
கள்ளி போகிய களரி மருங்கின் "

—புறம். 360

" கொன்றுற்றுத் துறந்த மாக்களின் அழிபிணன்
இடுமுடை மருங்கில் தொடுமிடம் பெறாஅது
புனிற்றுச்சிறை கழித்த பொறிய முதுபாறு
சிறகுபுடைத் திற்ற பறைப்புன் தூவி
செங்கணை செறித்த வன்கண் ஆடவர் "

—நற்றிணை. 329

" பாகும் பறையும் பருந்தின் பந்தரும் "

—மணிமேகலை. 4 : 41

" பாறெருடு நாய்க ளிசிப்பப் பறிப்பறிப் பற்றிய "

—போழ்தின்—குண்டலகேசி

" பாற்றின மார்ப்பப் பருந்து வழிப்படா
நாற்றிசையு மோடி நரிகதிப்ப—ஆற்ற "

—புறத்திரட்டு. 1394

" அடுதிறன் முன்பின் ஞற்ற முருக்கிப்
படுதலை பாறண்ண நூறி—வடியிலைவேல் "

—புறத்திரட்டு. 1381

" என்செயப் பாவி காளிங்
இருப்பதுஅங் கிருப்பமுன்னே
வன்சிறைக் கழுகும் பாறும்
வயிறுகள் பீறிப்போன "

—கலிங்கத்துப்பரணி. 304

" பாற்றின மார்ப்பப் பருந்து வழிப்படர "

—முத்தொள்ளாயிரம். 74

சங்கநூல்களில் கூறிய இரு செய்திகள் இந்தப் பிணந் தின்னிக் கழுகு எது வென்பதை அறிய உதவுகின்றன. இதற்குப் 'பறை நெடுங்கழுத்து' இருப்பதாக அகநானூற்றுப் பாடல் (244) கூறுகின்றது. பறை யென்பதற்குச் சங்க காலத்திலேயே 'நீங்கின' என்ற பொருள் உண்டு. புறநானூற் றிலும் இந்தப் பொருளில் வழங்கியுள்ளது. பறந்தலை என்ற சொல் சுடுகாட்டையும் போர்க்களத்தையும் குறிப்பிடுங்கால் இதே அடிப்படைப் பொருளைத் தாங்கியுள்ளது. ஆதலின் 'பறை நெடுங்கழுத்து' என்பதற்கு மயிர் நீங்கின நெடிய கழுத்துடைய பாறு என்று பொருள் கொள்ளவேண்டும். இத்தகைய கழுத்தையுடைய கழுகை (gyps bengalensis) பறவை நூலார் கூறியுள்ளனர். இறகுகள் இல்லாத நீண்ட கழுத்தையுடைய முடையை விரும்பும் கழுகு, எருவையின் வேறான பிணந்தின்னிக் கழுகு, எளிதில் காணக்கூடிய கழுகு தமிழ் நாட்டில் ஒருவகை உள்ளது. அதை ஆங்கிலத்தில் (Indian white-backed vulture) என்றழைப்பர். பெங்கால் கழுகு என்றும் அழைப்பர். இந்தக் கழுகையே பாறு என்று சங்கநூல்களிலும் பிற்கால நூல்களிலும் அழைத்தனர். பாறு என்ற சொல் நிகண்டுகளில் உலர்த்தல் வற்றுதல் என்று பொருள்படும். வற்றிய தோலுடைய தலையையும் கழுத்தையும் கொண்டுள்ளதால் பாறு என்று அழைத்தனர் என்று கருத லாம். இதன் கழுத்து மயிர்நீக்கின, பாடம் செய்யாத உலர்ந்த, வற்றிய தோல்போல் இருக்கும்.

இந்தப் பிணந்தின்னிக் கழுகு தமிழ்நாட்டில் எங்கும் ஊர்கள், கிராமங்கள் அருகில் பிணம் வீழ்ந்திருக்கும் இடத்தில் கும்பலாகக் காணப்படும். இந்தக் கழுகு சில குறிப்பிட்ட மரங் களில் பழக்கமாக உட்காரும் என்று பறவை நூலார் கூறுவர். இவ்வாறு தங்கும் மரங்களிலும் இடங்களிலும் இந்தக் கழுகு

நெடுங்காலம் எச்சமிட்டுவந்தால் மரங்கள் மடிந்து போய் விடும். மாந்தோப்பு, தென்னந்தோப்பு, புதுக்காடுகள் ஆகியவைகளில் இந்தக் கழுகுகள் தங்கினுல் அவைகள் அழிந்து விடும். (Favourite roots and the ground become besmirched and reeking with birds acrid excreta presenting a sepulchrae white washed appearance which kills off the trees if too long patronised. And in this way vultures sometimes become a serious local nuisance in coconut groves, mango orchards, forest plantations etc.)

புறநானூறு 359ஆம் பாடல் இதே செய்தியைக் கூறுவதாகத் தெரிகின்றது. "பாறுபடப் பறைந்த பன்மாறு மருங்கின் ....காடு" என்று கூறுவதால் பாறு சேரப் பறைந்த, அஃதாவது இலைகளை இழந்து வற்றிய மாறுபட்ட காடு எனக் கூறப் பட்டுள்ளதைக் கவனிக்கலாம். ஆதலின் பாறு சேர்ந்தால் பறைந்த நிலையில் காடுகளும் மாறும் என்று சங்கப்புலவர் கூறியது உண்மைச் செய்தியேயாகும். இச்செய்தியிலிருந்தும் பாறு எது என்பதைக் கண்டு கொள்ளலாம். கண்டார்க்கு அச்சம் தரும்படி பாறு இறங்கினதால் கேடு பொருந்தி யிருத்தலால் பாழிடமாகி என்று புறநானூறு (360) கூறு கின்றது. பாறு இறைகொண்ட இடம், அஃதாவது தங்கிய இடம் பறந்தலையாகும், பாழிடமாகும் என்று புறநானூறு குறிப்பிட்டதைக் கவனிக்கவேண்டும்.

பாறு கூட்டமாகவே பிணத்தைத் தின்னுமென்று பறவை நூலார் கூறுவர். வானத்தில், ஒரு பாறு பிணத்தைக் கண்டு கீழே இறங்கினுல் ஒன்றின்பின் ஒன்ருக இந்த இனப் பறவைகள் பிணத்தைச் சுற்றிச் சேர்ந்துவிடும். 'பாறுகிளை சேக்கும்' என்று அகநானூறு இதைக் குறிப்பிட்டுள்ளது. கொல்லப்பட்ட முடைநாற்றம் அடிக்கும் மனிதனின் பிணத்தின் பக்கத்தில் தோண்டுவதற்கு இடம் இல்லாது முதிய பாறு ஒன்று இருந்ததாக நற்றிணை கூறியுள்ளது. பாறுகள் பிணத்தைத் தின்னும்போது கடைசியில் மிஞ்சுவது வெறும் எலும்புக்கூடு மட்டுந்தான். பாறுகள் குறுநரியொடு பிணத்தைப் பற்றியிழுப்பதைப் புறநானூறு (359) கூறி யுள்ளது. முட்டையிட்ட முதிய பாறு புனிற்றுக் காலச்சிறகைக் கழித்ததாகவும் அவ்வாறு சிறகைப்புடைத்து நீக்கிய தூவியை ஆடவர் அம்பில் செறித்ததாகவும் நற்றிணை (329) கூறி யுள்ளது. முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கச் செய்யும் பாறு புனிற்றுக்காலச் சிறகை கழிக்கின்றதா என்பதைப் பறவை

நூலார் ஆராயவேண்டும். பாறுகள் வானத்தில் வெகுநேரம் அழகாக வட்டமிட்டுக்கொண்டே தரையில் இரையைப் பார்க்கும். பருந்துகளுடன் வானில் சுற்றுவதைப் 'பந்தர்' என்று மணிமேகலை குறிப்பிட்டுள்ளது.

பாறுகள் பிணத்தை நாய்களுடன் இழுப்பதைக் குண்டல கேசி கூறியுள்ளது. பாற்றினமும் பருந்தும், நரியும், நாயும் பிணத்தைச் சுற்றி இருப்பது புறத்திரட்டில் (1394) கூறப் பட்டுள்ளது. நாய்களும், நரிகளும் பிணத்தை நாடுவதைப் பாறு வானில் பறந்துகொண்டே உற்றுப்பார்த்து இறங்கிப் பிணத்தை உண்ணும்போது அளவுக்கு மீறி வயிற்றை நிரப்பிக் கொள்ளும். அதனுல் பறக்க முடியாது, தரையிலே இரவு நேரத்தில் உட்கார்ந்திருக்குமென்று கூறுவர். கலிங்கத்துப் பரணியில் கழுகும் பாறும் வயிறுகள் பீறிப்போயின என்று கூறியது அளவுக்கு மீறித் தின்னுவதைக் குறித்து என்று கொள்ளலாம். பாற்றினம் என்று பிற்கால நூல்கள் குறிப் பிடுவது இவைகள் கூட்டமாகக் காணப்பட்டதைக் குறித்தே யாகும். பாறு என்பதற்குப் பொருள் கூறுங்கால் உரை யாசிரியர்கள் பருந்து என்றும், கழுகு என்றும் கூறினர். பிணந்தின்னிக் கழுகு என்பதை அறிந்து கூறவில்லை. தேவாரத்தில் 'பாறேறிய படுவெண்டலை', 'பாறு சேர்தலைக் கையர்' என்று குறிப்பிட்டது பாறு தின்று வெறும் எலும்பாகப் போட்ட மண்டையோட்டைக் குறித்ததாகும்.

சங்க நூல்களில் ஒரே ஒரு பாட்டில் ''பொகுவல்'' என்றொரு பறவை கூறப்பட்டுள்ளது.

> ''கவிசெந் தாழிக் குவிப்புறத் திருந்த
> செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா
> வாய்வன் காக்கையும் கூகையும் கூடிப்''
>
> —புறநானூறு - 238

பிணத்தைப் புதைக்கும் தாழியின் குவிந்த புறத்தில் சிவந்த செவியையுடைய பிணந்தின்னிக் கழுகும் பொகுவலும் காக்கையும் இருந்ததாகப் புறநானூறு கூறுகிறது. எருவையும், காக்கையும் பிணத்தைத் தின்னும் பறவைகளே, இவையுடன் கூறப்பட்ட 'பொகுவல்' யாதாவதொரு பிணந்தின்னிக் கழுகாகவே இருக்கும். எருவை, பாறு ஆகியவைகளைத் தவிர்த்துத் தமிழ்நாட்டில் அரிதாக மற்றொரு பிணந்தின்னிக் கழுகும் காணப்படுகின்றது. இது பாறுபோலவே உருவிலும் தோற்றத்திலும் காணப்படும். கழுத்திலும் தலையிலும் மயிர்

போன்ற சிறிய தூவிகள் உண்டு. பிணந்தின்னிக் கழுகுகளில் எருவையும் பாறும் கூறப்பட்டிருப்பதால் பொகுவல் என்பது மூன்ருவதாகக் கூறப்படுகின்ற பிணந்தின்னிக்கழுகான 'Indian longbilled vulture' ஆகலாம். பொகுவல் என்பது ஒருவகைப் பிணந்தின்னிக் கழுகு என்பதில் ஐயமில்லை. பொகு என்ற சொல்லின் அடிப்படையாக இப்பெயர் தோன்றியிருக்கலாம். பொகு என்ற சொல் கன்னடம் முதலிய திராவிட மொழிகளில் உள்ளே செலுத்துவது, புகுவது என்ற பொருள் தருகின்றது. தமிழில் இது 'புகு' என்ற சொல்லாகப் பயில்கின்றது. பொக்கம் என்ற சொல்லும் தமிழில் உள்ளது. தமிழ்நாட்டில் இவை மூன்றிலும் வேருன பிணந்தின்னிக் கழுகும் உள்ளது. இதை மஞ்சள் திருடி என்று தற்காலத்தில் அழைப்பர். இதன் அலகு மஞ்சளாய் இருக்கும். குளிக்கும்போது மஞ்சளைத் திருடி மூக்கில் பூசிக்கொண்டதாகக் கற்பனை செய்து பெயர் இட்டனர். மஞ்சள் களவாணி என்றும் இதை அழைப்பதுண்டு. பொகுவல் என்பது இதுவுமாகலாம். ஆனல் மஞ்சள் திருடி பிணத்தை மட்டுமின்றி, கழிவுப் பொருள்களையும் மனிதரின் மலத்தையும், தவளை முதலிய சிறிய உயிர்களையும் தின்னும் வழக்கமுடையது. மலையாளத்தில் இதைத் தோட்டிக்கழுகன் என்று அழைப்பர். தெலுங்கில் 'தெள்ள போரவா' (வெள்ளைப் போரவை) என்று வழங்குவர். இந்தக் கழுகுதான் திருக்கழுக் குன்றத்தில் நடுப்பகலில் வருகின்றதாகும். எகிப்தியர்களும் இந்தக் கழுகைத் தெய்வமாகக் கருதிப் போற்றி வந்தனர். ஆகவே சங்கநூல்களில் மூன்று வகைப் பிணந்தின்னிக் கழுகுகள் கூறப்பட்டனவாகக் கருதலாம். எருவையும் பாறும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. பொகுவல் என்பதும் ஒரு வகைப் பிணந்தின்னிக் கழுகாகும். தமிழ்நாட்டில் உள்ள நான்கு வகைப் பிணந்தின்னிக் கழுகுகளில் மூன்று வகைகளைக் கூறியது சங்கப் புலவர்களின் அறிவுத்திறமையைக் காட்டு கின்றது. பாறு என்ற பிணந்தின்னிக் கழுகை ஆங்கிலத்தில் 'The white-backed vulture' என்றும் பறவை நூலில் 'Gyps bengalensia' என்றும் அழைப்பர். இதை மலையாளத்தில் கழுகன் என்றழைப்பர். எருகாலி (Yerukali) என்ற திராவிட மொழியில் 'வாலோர்யா' (Walhorya) என்றழைக்கின்றனர். வெள்ளை எருவை என்பது மாறி இப்படி வழக்கிற்று என்பது ஆராயத்தக்கது. பொகுவல் என்பது 'The long-billed vulture' ஆகலாம். அல்லது 'The Indian Scavanger vulture'...ஆகவு மிருக்கலாம்.

---

# உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள்

துல்³ (துளைத்தற் கருத்து வேர்ச்சொல்) - தொடர்ச்சி

[ஞா. தேவநேயன்]

துல் — துள் — துண்பு — தும்பு = உட்டுளை, துளையுள்ள உறுப்பு, உறிஞ்சி.

தும்பு — தும்பா = 1. உட்டுளையுள்ள சுரைக் குடுக்கை. 2. குடுக்கைக் கலம். 3. குடிகலவகை. தும்பா—வ. தும்ப.

தும்பு—தும்பாலை = சுரைக்காய், சுரைக்குடுக்கை.

தும்பு—தும்பி = 1. சுரை. (பிங்.). "கமுகு மாத் தும்பி" (சைவச. பொது. 277). 2. குடிகல வகை. தும்பி—வ. தும்பீ.

3. தேனுறிஞ்சும் உறுப்புள்ள வண்டு. (பிங் ). "துவைத் தெழு தும்பி" (அகம். 317).

ம. தும்பி, க., து. தும்பி. தும்பிப் பதக்கம் = வண்டின் வடிவாகச் செய்யப்பட்ட பதக்கம். "தும்பிப் பதக்க விலை சொற்பமோ" (விறலிவிடு. 698).

4. உட்டுளை யுள்ளதும் கைபோல் உதவுவதுமான நீண்ட மூக்கையுடைய யானை. (பிங்.) "தும்பியை யரிதொலைத் தென்ன" (கம்பரா. வாலிவதை. 51).

தும்பிக்கை = யானைக்கை, துளையுள்ளகை.

தும்பிமா = வண்டு துளைத்த மாம்பழம்.

தும்பு—துப்பு = 1. துருவியாராய்தல். 2. உளவு. 3. உளவடையாளம். க., து. துப்பு (Tubbu).

தும்பு—தூம்பு = 1. உட்டுளை. "தூம்புடைத் தடக்கை (புறம். 19). 2. உட்டுளைப் பொருள். (பிங்.). 3. மதகு. "குளந் தூம்பு விட்டு" (சீவக. 2760). 4. மூங்கில். (திவா.) 5. மூங்கிற் குழாய். "தூம்பகம் பழுநிய தீம்பிழி மாந்தி" (பதிற்றுப். 81 : 21). 6. மூங்கிலால் ஆகிய இசைக்கருவி. "கழைவளர் தூம்பின் கண்ணிட மிளிர" (மலைபடு. 533). 7. மரக்கால். 8. இடுக்குவழி. (யாழ். அக.). 9. மனைவாயில். 10. வாய்க்கால். (பிங்.). 11. சாய்கடை. "சுருங்கைத்

தூம்பின் மனே'' (மணி. 28 : 5). 12. தோற்கூனே. 13. மேனிலேயிலிருந்து மழைநீர் விழுங்குழாய்.

ம., க. தூம்பு, தெ. தூமு.

தூம்புக்கை = தும்பிக்கை (உ. வ.).

தூம்புவாய் = சாய்கடை (திவா.).

தூம்பு — தூம் = 1. முகத்தலளவை வகை. எ - டு: குப்பத்தூம், தேவதூம். (W). 2. ஒரு நிறை.

தூம்பு—ஒ. நோ : L. tubus, E. tube.

தூம்பு—தூம்பல் = சுரை. (மலே.).

தூம்பு—தூம்பா. தூம்பா மடை = சாய்கடை (நெ. வ.)

தும்பு—தொம்பு — தொம்பை = மூங்கிலா லான நெற்குதிர். "அழகான ரம்பை, அரிசி கொட்டுந் தொம்பை.'' (உ. வ.). க. தொம்பெ.

தொம்பை — தொப்பை = 1. தொந்தி. "தொப்பை யொரு பெருவயிற்றுப் பிள்ளேக்குச் சுமத்துதியே.'' (தக்கயாகப். 229). 2 கொப்புளம் (யா.).

தொப்பை (வயிறு)—தெ தொப்ப (dobba).

துள்—துய். துய்த்தல் = 1. உண்ணுதல் (துளே போன்ற வாய்க்குட் செலுத்துதல்). ஒ. நோ : துல் — துன் — தின். "புதுப்பூத் துய்த்த வாய'' (அகம். 15).

2. புலன்களால் நுகர்தல். "கொடுப்பதூஉந் துய்ப் பதூஉ மில்லார்க்கு'' (குறள். 1005).

3. இன்ப துன்பம் நுகர்தல். "தொல்வினேப் பயன் றுய்ப்ப'' (கலித். 118).

துய் = உணவு. "துய்தா னுறும் வாயினே'' (கந்தபு. தாரக. 159).

துய் — து. துத்தல் = 1. உண்ணுதல். "துப்பார்க்குத் துப்பாய தூப்பாக்கி'' (குறள். 12). நுகர்தல்.

து=1. உணவு. (இலக். அக). 2. நுகர்வு. (யாழ். அக.).

து — துப்பு = 1. உணவு. "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கி" (குறள். 12). 2. நுகர்ச்சி. "துப்புமிழ்ந் தல மருங் காமவல்லி" (சீவக. 197). 3. நுகர்ச்சிப் பொருள். "வருபவர்க்குத் துப்பமைத்து நல்கும்." (திருவாரூ. 480). 4. வலிமை. "கெடலருந் துப்பின்" (அகம். 105). 5. திறமை. "ஆழ்கடலைக் கடைந்த துப்பனே" (திவ். திருவாய். 4 : 7 : 5).

து — துவ்வு. துவ்வுதல்=1. உண்ணுதல். 2. நுகர்தல். (திவா.) "துவ்வா நறவின் சாயினத் தானே" (பதிற்றுப். 60 : 12). 3. வலியுறுதல். "ஆன்ற துணையிலன் தான்றுவ் வான்" (குறள். 862).

துவ்வு=1. உணவு. (யாழ். அக.). 2. ஐம்பொறி நுகர்ச்சி. (சூடா.). 3. வினைப் பயன் நுகர்ச்சி. (யாழ். அக.).

துவ்வு—துவ்வை=பருகுதற் குரியது.

துவ்வாமை=1. உண்ணாமை. 2. நுகராமை. "துவ் வாமை வந்தக் கடை" (கலித். 22). 3. வறுமை. "துன் புறூஉந் துவ்வாமை யில்லாகும்" (குறள். 94). 4. வெறுப்பு.

துள்—துன் — தூண் — தூணி=1. அம்புக் கூடு.

தூணி—வ. தூண.

2. நான் மரக்கால். "கருங்கொள்ளுஞ் செங்கொள்ளுந் தூணி பதக்கென்று" (நாலடி. 387).

தூணி—வ. ஸ்தூணு.

துள் — தொள்—தொள்கு=பள்ளம். (W.).

தொள்—தொள்ளல்=துளை. (உ. வ.).

தொள்—தொள்ளை =1. துளை. "தொள்ளைப் புலாற்பை" (திருப்பு. 289). 2. குழி. "தொள்ளை மன்றத் தாங்கண்" (புறம். 333). 3. துளையுடைப் பொருள். (யாழ். அக.). 4. மரக்கலம். (திவா.). 5. மரக்கால். (தைலவ. தைல. 135 : 17.) 6. குற்றம். "தொள்ளை யுணர்வின் னவர்கள் சொல்லின்" (சீவக. 496). 7. அறியாமை. "தொள்ளை பூத்தலர்ந்த

நெஞ்சிற் றக்கன்'' (கூர்மபு. தக்கன்வே. 6). ம. தொள்ள, க. தொள்ளெ.

தொள்ளைக்காது=1. துளையிட்ட காது. 2. பெருந் துளைக்காது. 3. அணி நீங்கிய துளைக்காது.

தொள்ளுதல்=1. துளைத்தல். (திவா.). ''செந்தீத் தொட்ட கருந்துளைக் குழலின்'' (பெரும்பாண். 179). 2. நெகிழ்தல். (W.).

தொள்—தொள்கு. தொள்கல்=துளைத்தல். (பிங்.).

தொள்ளை—தொளை. தொளைத்தல்=1. துளையிடுதல். ''மணித் தோளையுந் தொளைத்தான்'' (கம்பரா. நிகும்பலை. 123.). 2. தொந்தரவு செய்தல். (உ. வ.). 3. புலனம் (விஷயம்) தெரிய ஆழம் பார்த்தல். (உ. வ.).

தொள்=தொழு=சிறு குற்றவாளிகட்குத் தண்டனையாகக் கால்களை மாட்டி வைக்கும் குட்டை யென்னும் மரச்சட்டம்.

தொளை=1. துளை. ''தொளைகொடாழ் தடக்கை'' (கம்பரா. சித்திர. 29). 2. மூங்கில். (பிங்.).

தொள்—தொழு=1. தொழில். 2. பயிர்த்தொழில்.

தொழு—தொழுவன்=1. தொழிலாளி. 2. பயிரிடுவோன்.

தொழுவர்=1. தொழில் செய்வார். ''நீர்த்தெவு நிரைத் தொழுவர்'' (மதுரைக். 89). 2. உழவர். ''நெல்லரி தொழுவர்'' (புறம். 209).

தொழு—தொழில்=1. செயல். ''பிறிது தொழி லறியாவாகலின்'' (புறம். 14). 2. உழவு, கைத்தொழில், வரைவு, வாணிகம், கல்வி, கம்மியம் என்னும் அறு தொழில்களுள் ஒன்று. (திவா.). 3. படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் இறைவன் முத்தொழில்களுள் ஒன்று. ''தோற்றுவித் தளித்துப் பின்னுந் துடைத்தருள் தொழில்கள் மூன்றும்'' (சி. சி. 1 : 33). 4. அலுவல். 5. தொழில்திறம். 6. வேலை. 7. ஏவல். ''தொன்று மொழிந்து தொழில் கேட்ப'' (மதுரைக். 72). 8. வினைச்சொல். ''பெயருந் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப'' (தொல். எழுத். 132).

உலகில் முதன் முதல் தோன்றிய விளைப்பு அல்லது உண்டாக்கத் தொழில், நிலத்தைத் தோண்டி அல்லது கொத்தி அல்லது உழுது வித்திய பயிர்த்தொழிலாதலின், தோண்டு

தலைக் குறிக்கும் தொள் என்னும் மூலத்தினின்று திரிந்த தொழில் என்னும் பெயர்ச்சொல், முதற்கண் உழவுத் தொழிலையும் பின்னர்ப் பிறதொழிற் பொதுவையும் குறித்தது. தொள் என்னும் தென் சொல்லொடு till என்னும் ஆங்கிலச் சொல்லை ஒப்புநோக்க.

E. till = to prepare and use soil for crops.

tiller = ploughman, tillage = ploughing.

தொள்—தொய். தொய்தல் = 1. உழுதல். "தொய்யாது வித்திய துளர்படு துடவை" (மலைபடு. 122). 2. வினை செய்தல். "தொய்யா வுலகத்து நுகர்ச்சியுங் கூடும்" (புறம். 214).

தொள்—தொண்டு = 1. துளை. 2. ஒன்பது. "தொண்டு படு திவவின்" (மலைபடு. 21). 3. ஒடுக்கவழி. (உ. வ.). 4. உருவாஞ் சுருக்கு (அகநி.). ம. தொண்டு.

மாந்தன் உடம்பில் ஒன்பான் துளைகள் இருப்பதால், துளையின் பெயர் அதன் தொகைக் காயிற்று. "தொண்டுபடு திவவின் முண்டக நல்யாழ்" (ஆசிரியமாலை). தொண்டு + பத்து = தொண்பது — ஒன்பது — ஒன்பது. தொண்டு = 9. தொண்பது = 90. தொண்டு + நூறு = தொண்ணூறு (900). தொண்டு + ஆயிரம் = தொள்ளாயிரம் (9000). தொண்டு என்னும் முதலாம் இடத்து எண்ணுப் பெயர் வழக்கு வீழவே, அதற்கு மேற்பட்ட இடத்து எண்ணுப் பெயர்களெல்லாம் ஒவ்வோரிடம் முறையே தாழ்ந்துவிட்டன என அறிக.

> "தொண்டுதலை யிட்ட பத்துக்குறை யெழுநூற்
> றொன்பஃ தென்ப உணர்ந்திசி னோரே" (செய். 100)

என ஒரே தொல்காப்பிய நூற்பாவில், பண்டைப் பெயரும் பின்றைப் பெயரும் வந்திருத்தல் காண்க.

தொண்டு—தொண்டி = துளை. தெ. தொண்டி.

தொண்டு—தொண்டலம் = 1. நீண்ட துளையுள்ள யானைத் துதிக்கை. "சூர்மக னுந்து தொண்டலம் பற்றி" (கந்தபு. அமரர்சி. 83). 2. யானைத் துதிக்கை போன்ற கம்மாலை இறைவைக் கூனைத் தோல் வால்.

தொண்டலக்குழி = இறைவைக் கூனை நீர் வால் வழியாக விழும் பள்ளம்.

தேட்டம்=1. துருவித்தேடுகை. 2. பொருள் ஈட்டுகை. 3. ஈட்டப்பட்ட பொருள். "தேட்டற்ற தேட்டமே" (தாயு. தேசோ. 5). 4 விருப்பம். "தேட்டந் தான் வாளெயிற்றிற் றின்னவோ" (கம்பரா. சூர்ப். 121). அவனுக்கு அதில் தேட்ட மில்லை. (உ. வ.).

தேட்டாளன்=1. முயற்சியாற் பெரும்பொருள் ஈட்டி யவன். "தேட்டாளன் காயற்றுரை சீதக்காதி" (தனிப்பா. i, 238). 2. தேட்டிற்குரிய புதல்வன். (இ. வ.).

தேட்டு—தேட்டை=தேட்டம்.

தோண்டு—தோண்டான்=ஓநாய். (சது.).

கழுத்து, மார்பு, வயிறு ஆகியவற்றைக் கடித்துச் சதையைத் தோண்டித் தின்றுவிடுவதால், ஓநாய் தோண்டான் என்று பெயர் பெற்றது" போலும்!

தோண்டு—தோண்டி=மரத்தைக் குடைந்து தோண்டிச் செய்யப்பட்ட சிறுகுடம், அதுபோன்ற மாழைக் கலம்.

துள்—துர்—துரு—துருவு. துருவுதல்=1. துளைத்தல். 2. தேடுதல். "கீழ்நீர்க் குளித்தானைத் தீத்துரீஇ யற்று" (குறள். 929). 3. குடைதல். 4. கடைதல்.

க. துருவு, தெ. துருமு.

துரு—தூர். தூர்த்தல்=1. உட்செலுத்துதல். "பழுக்கும் பழத்தைத் தூர்த்து" (தைலவ. தைல. 134). துரிசு. 2. அடைத்தல். "கடறூர்த்தன் மலையகழ்தல்." (சீவக. 2165). 3 மறைத்தல். 'விண்ணவர் விசும்பு தூர்த்தார்" (கம்பரா. கைகேயி. 74). 4. எல்லாவற்றையும் மறைத்துப் பொழிதல். "தூர்க்கின்ற மலர்மாரி தொடரப்போய்" (கம்பரா. இராவணன் வதை. 199).

தூர்தல்=1. புகுதல். வீட்டிற்குள் தூர்ந்து விட்டான். (வ. ஆ. வ.). 2. அடைபடுதல். "துளவாய் தூர்ந்த துரப்பமை யாணி" (பொருந 10). 3. மறைதல். "வள்ளி நடந்த வழி தூர்ந்திடாது" (வெங்கைக்கோ. 345). ம. தூருக.

தூர்=கிணற்றை யடைக்கும் சேறு செத்தை.

தூர்=தூர்வை. "தானே வந்தாலுந் தூர்வை யெடுக்க வொண்ணாது" (திவ். இயற். திருவிருத் 12, வ்யா. 85).

தூர்—தூரி=மீன் தங்கி நீர் மட்டும் துருவிச் செல்லும் மீன்பொறி.

தூர்—தோர்—தோரணம்=தெருவில் துருவக் (குறுக்காகக்) கட்டும் சுவடிப்புத் தொங்கல்.

தொள்—தொள. தொளதொளத்தல் = துளையுண்டது போல் நெகிழ்தல்.

தொள—தொளர்—தளர். தளர்தல்=1. நெகிழ்தல். 2. கட்டுக்குலைதல். "தாழாத் தளராத் தலைநடுங்கா" (நாலடி. 14). 3. சோர்தல். "தளர்ந்தே னெம்பிரா னென்னைத் தாங்கிக் கொள்ளே" (திருவாச. 6 : 1). 4. நுடங்குதல். 5. மனங் கலங்குதல். 6. உயிரொடுங்குதல். "தகை பாட வலாய் தளர்கோ தளர்கோ" (சீவக. 1379).

தொள்—தொய். தொய்தல்=1. தளர்தல். 2. சோர்தல். "தொய்யுமான் போலத் துவக்குண்டேன்" (விறலிவிடு. 107). 3. துவளுதல். "தொய்யு மரவணைக்குள்" (திருப்பு. 1173). 4. இளைத்தல். 5. வாடுதல். 6. தொங்குதல். 7. கெடுதல். "தொய்யா வெறுக்கையொடு" (பெரும்பாண். 434).

தொய்—தொய்யகம்=தலைக்கோலத்தின் ஓர் உறுப்பு. "தொய்யகந் தாழ்ந்த கதுப்பு" (கலித். 28).

துல் — துன் — துன்பு = துளைத்தாற்போல் வருத்தும் நிலைமை. துன்பு—துன்பம்.

துன்பு—தும்பு=வரம்பு கடந்த நடத்தை, கடுஞ்சொல், ஒ. நோ: வன்பு—வம்பு. வம்பு தும்பு என்பது மரபிணை மொழி.

துல்—தொல்—தொல்லை=துன்பம், இடர்ப்பாடு.

தொண்டு=தொழில், பணிவிடை, அடிமை வேலை.

தொண்டு—தொண்டன்=பணிவிடைக்காரன், திருவடியான்.

தொழீஇ=1. தொழில் செய்பவள். (கலித். 103). 2. பணிப்பெண். "தொழீஇயுட னுண்ணூர்" (சிறுபஞ். 38).

Serve, servant, service, servitude, servility, serf என்னும் உயர் சொல்லும் இழி சொல்லும், Servus (L.) என்னும் ஒரே சொல்லினின்று தோன்றியிருத்தலை நோக்குக.

---

# சிலப்பதிகாரம் என்பதின் பொருள் யாது?

[டாக்டர். துரை. சிங்காரவேலன் M.A., Ph. D.,

தமிழ்த்துறைத் தலைவர்,

உசுமானியாப் பல்கலைக் கழகம், ஐதராபாத்.]

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

குறவர் கூறிய பின்னரே

"யானறிகுவன் அதுபட்டதென்று"

கண்ணகியின் வரலாற்றைக் கூறுகின்றார். இவ்வரலாற்றை, இளங்கோவடிகளிடம் குன்றக்குறவர் கூறவில்லையெனில், சாத்தனார் அவ்வரலாற்றை இளங்கோவடிகளிடம் கூறியிருப்பார் என்பதே ஐயத்திற்கு இடமானதாகும்.

மேலும், இவ்வரலாற்றைக் கேட்ட இளங்கோவடிகள் சீத்தலைச் சாத்தனாரிடம்

"சிலப்பதிகாரம் என்னும் பெயரால்
நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்"

என்று கூறியகாலை, சீத்தலைச் சாத்தனார் அதற்கு உடன்பட்டு இலக்கியம் எழுத விழைந்தாரன்று. மாறாக இளங்கோ வடிகளே இக்காவியம் எழுதத் தகுதியுடையவர் என்பதை

"முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரியது
அடிகள் நீரே அருளுக"

என்று இலக்கியம் எழுதுமாறு இளங்கோவடிகளிடம் கூறுகின்றார். மேலும் அவர், தமது காவியத்தில் கண்ணகியின் செயல் குற்றம் உடைத்து என்றே கூறியுள்ளார்.

கண்ணகி மீண்டும் பிறந்து புத்தபகவான் பாதங்களை வணங்கியே முத்தி பெறுதல் முடியும் என்று கண்ணகி கூறியதாக எழுதியும் உள்ளார். கண்ணகியின் செயல்கள் பெருமைப்படுதற்குரித்து என்று சாத்தனார் கருதவில்லை என்பதை இவைகளே நன்கு காட்டும். இதுகாறும் கண்டது, இளங்கோவடிகள் சிலப்பதிகாரக் காவியம் எழுதியமைக்குச் சிலம்பணி காரணமன்று என்பதும், சீத்தலைச் சாத்தனார்

காரணம் அன்று என்பதும் நன்கு விளங்கும். எனவே, இக் காவியம் எழுதப்பட்டமைக்குக் காரணமாக இருந்தவர் யாவர்? என்பதை நோக்குவோம் சிலப்பதிகாரக் காவியம் எழுதப்பட்டமைக்குக் காரணமாக இருந்தவர் குன்றக்குறவரே ஆவர். எவ்வாறு காரணம் என ஆராய்வோம்.

கண்ணகி இறந்த பின்னர் எவரும் இதுபற்றிச் சிந்திக் காதிருப்பின், இக்காவியம் தோன்றியிருக்க வழியில்லை. கண்ணகியின் பெருஞ்சிறப்பினை உள்ளபடி உணர்ந்தவர் குன்றக் குறமகளிரேயாவர். கண்ணகியைக் கண்டவுடன் "யாவிரோ"? என வினவுகின்றனர்கள். கண்ணகியின் தோற்றம் இக்குன்றக்குறமகளிரைப் பெரிதும் ஈர்த்துவிட்டது. அவளது விடையினால் அவளிடம் அவர்க்குப் பெரிதும் பற்றும் பக்தியும் ஏற்பட்டுவிட்டன.

"மணமதுரையோ டரசுகேடுற வல்வினைவந் துருத்தகாலைக்
கணவனையங் கிழந்துபோந்த கடுவினையேன்யான்"

என்று கூறிய கண்ணகியின் சொற்களும், அவள் விண்ணுலகு சென்ற முறையும், அவர்தம் உள்ளத்தை உருக்கி, அவள்பால் ஈடுபாட்டை ஏற்படுத்தி விடுகின்றன. அப்பொழுதே கண்ணகியைக் கொண்டாடி வணங்குகின்றனர். அச்செய்தி வருமாறு

"இவள் போலும் நங்குலக் கோர்
இருந் தெய்வம் இல்லை யாதலின்
சிறுகுடி யீரே சிறுகுடி யீரே
தெய்வங் கொள்ளுமின் சிறுகுடி யீரே"

என்று கண்ணகியைத் தெய்வமாகக் கொண்டு போற்றி வணங்க ஆரம்பித்துவிட்டனர். சேரன் செங்குட்டுவனே கண்ணகிக்குக் கோயில் எடுக்காவிடினும், இளங்கோவடிகளே காவியமாக இயற்றாவிடினும், அக்குறமகளிர் அமைதி பெற் றிருக்கமாட்டார்கள் என்பதும் அவர்கள் எவ்வாற்றானும், கண் ணகியின் பெருமையை நிலைநாட்டியே தீர்வர் என்பதும் இவர்தம் செயலால் நன்கு விளங்கும். கண்ணகியின் வரலாறு மதுரையோடு முடிந்திருப்பினும், இக்காவியம் எழுந்திருக்காது. இவ்வரலாற்றைக் காவியமாக எழுதும்வண்ணம் செய்தவர், குன்றக்குறமகளிரால் தூண்டப்பட்டு அரசனிடம் அனுப்பப் பட்ட குன்றக்குறவர் என்பது நன்கு விளங்கும். எனவே, இக்காவியம் எழுதற்குக் காரணமாக இருந்தது, குன்றக்குறவர் எழுப்பிய ஒலியே ஆகும். எனவே இக்காவியம் ஒலி காரணமாக

வளர்ந்த வரலாற்றினை உரைப்பது என்பதே உண்மையான செய்தியாகும். அஃதாவது குன்றக்குறவர் எழுப்பிய ஒலி காரணமாக வளர்ந்த வரலாற்றினை உரைப்பதே சிலப்பதிகாரக் காவியமாம். இதனாலேயே இக் காவியத்திற்கு ''சிலப்பதிகாரம்'' என இளங்கோவடிகள் தலைப்புத் தந்தார் என்பதே உண்மையாகும். அவ்வாறாயின் சிலப்பதிகாரம் என்பதற்கு ஒலி காரணமாக வளர்ந்த வரலாற்றினை உரைப்பது என்று பொருள் கூறுதல் எவ்வாறு பொருந்தும்? என்பதை ஆராய்வோம்.

## சிலம்பு என்ற சொல்லின் பொருள்

சிலம்பு என்ற சொல் ஒலியையும், மலையையும், அணியையும் குறிக்கும் சொல்லாகும். இதனைச்

''சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச்
சூரர மகளி ராடுஞ் சோலை''
(40-41. திருமுருகாற்றுப்படை)

என்னும் அடிகளும், ''சிலம் பமைப் பத்தல்'' என்னும் சொற்களும் [26. மலைபடுகடா அம்],

நளிமலைச் சிலம்பின் சிலம்புங் கோயில் [நெடுநல்வாடை-100] (இதன் பொருள் செறிந்த மலையின் ஆரவாரம் போல ஆரவாரிக்கும் கோயில்) என்னும் மேற்கூறிய காட்டுகள் அனைத்தும் சிலம்பு என்ற சொல் பக்கமலையையும், ஒலியையும், அணியையும் குறித்தது என்பதற்குப் போதிய சான்றுகளாம்.

## பொதுத்தன்மை

இவ்வாறு பக்கமலையையும், ஒலியையும், அணியையும் சிலம்பு என்னும் சொல்லால் ஏன் குறித்தனர்? என்பதை ஆராய்வோம். இச் சொல்லால் உணர்த்தப்படும் பொருள்களிடம் பொதுவாக உள்ள ஒருதன்மை நோக்கியே, இப் பொதுச்சொல்லால் இவைகளை முன்னோர் உணர்த்தியிருத்தல் வேண்டும். அப்பொதுத்தன்மையாவது இப்பொருள்களின்பால் உள்ள ஒலியேயாகும் இப்பொருள்கள் ஒலியைக் கொண்டிருத்தலாலேயே ''சிலம்பு'' என்று அழைக்கப்பட்டன என்பது சிந்திப்பின் நன்கு தெளிவாகும்.

''சிலம்பு'' என்ற சொல்லிற்குப் பொருள் ''ஒலி'' என்பதாம். பக்கமலை ஒலியைக் கொண்டிருத்தலாலேயே சிலம்பு என்னும் காரணப் பெயரைக்கொண்டது. மலைகளில் எழும் ஒலிகளின் செறிவை, சிலப்பதிகாரம் நன்கு காட்டும். அது வருமாறு:

"குன்றக் குரவையொடு கொடிச்சியர் பாடலும்
வென்றிச் செவ்வேள் வேலன் பாணியும்
தினைக்குறு வள்ளையும் புதைத்தெழு விளியும்
நறவுக்கண் ணுடைத்த குறவ ரோதையும்
பறையிசை அருவிப் பயங்கெழும் ஓதையும்
பயம்பில் வீழ்யானைப் பாக ரோதையும்
இயங்குபடை யரவமோ டியாங்கணு மொலிப்ப"

என்னும் அடிகள், மலையில் தோன்றும் ஒலியின் செறிவைக் காட்டும்.

அருவி இழியும் ஒலி, மலைமுகடுகளில் கொண்டல் மோதி உறுமும் இடியொலி, பிளந்த பாறைகள் உருண்டு விழும் பேரொலி, வாள்வேங்கையைத் தாக்கி வீரர் ஆரவாரிக்கும் முரசொலி; அடிபட்டு வீழ்ந்த புலியின் பேரொலி, புலியால் தாக்குண்ட வீரர் செய்யும் ஓதை; களிறு பிளிற எழும் முழக்கம், பாறைகளில் தாக்குண்டு எதிரொலிக்கும் ஓதை, தினைப்புனங் காப்போரின் இசையொலி, வேட்டையாடுவோர் செய்யும் சலசலப்பு, இவை போன்ற எண்ணற்ற ஒலிகள் எங்கும் பரவி ஒலியாய்க் காட்சி தந்து, தன்னை விளக்கும் இடம் மலையாதலின், இதனைச் சிலம்பு - ஒலியைக்கொண்டது - என்னும் காரணப்பெயரால் முன்னோர் உணர்த்தினர். இவ்வுண்மை, இவ்வடிகளால் நன்கு உணர்த்தப்படுகின்றது. மேலும், இவ்வாறு ஒலியாய்க் கொண்டுள்ள மலையில் வாழ்பவனையும் சிலம்பன் என்றே அழைத்தனர்.

"கறிவளர் தண்சிலம்பன் செய்தநோய் தீர்க்க
அறியாள்மற் றன்னை அலர்கடம்பன் என்றே
வெறியாடல் தான்விரும்பி வேலன் வருகென்றாள்"

என்னும் அடிகள், மலையினைக் குறிக்கும் சொல், மலையில் வாழ்பவனையும் குறிக்கப் பயன்பட்டது என்பதை விளக்கும்.

ஒலியைக் கொண்டிருத்தலாலேயே, அணிகளில் ஒன்றாகிய சிலம்பு சிலம்பென்று அழைக்கப்பட்டது. இவ்வணியின் சிறப்பு, இதன் ஒலியையே முக்கியமாகக் கொண்டது. இதனாலேயே விரும்பும் ஒலியைத் தரும்வண்ணம், பரலைச் சிலம்பினுள் இட்டு, இதனைச் செய்தனர். எனவே, இவ்வணியின் சிறப்பு, அதன் ஒலியின் சிறப்பையே அடிப்படையாகக்கொண்டது என்பது நன்கு விளங்கும். ஒலியாகிய சிறப்பை அடிப்படையாகக் கொண்டதாலேயே இவ்வணி சிலம்பு என்று அழைக்கப்பட்டது.

இன்னும், தமிழ்நாட்டில் விளையாடும் விளையாட்டுக்களில் ஒன்று சிலம்பம் ஆகும். இவ்விளையாட்டின் தன்மையை, அதனை, விளையாடும்பொழுது எழும் ஒலியைக் கொண்டே உணர்தல் முடியும். நீண்ட கோல்களால் தாக்கி, ஒலியெழுப்பி, விளையாடும் விளையாட்டே சிலம்பம் ஆகும். இவ்விளையாட்டு சிலம்பம் என்று அழைக்கப்படுதற்குக் காரணம், அதன்பால் எழும் ஒலியேயாகும். எனவே, ஒலியைச் சிலம்பு என்ற சொல்லால் முன்னோர் குறித்தனர் என்பதும், பின்னர் ஒலி யைக் கொண்டுள்ள பொருள்களைச் சிலம்பு என்ற சொல்லால் குறித்தனர் என்பதும், அதனாலேயே சிலம்பு என்னும் சொல் மலையையும், அணியையும், பின்னர்க் குறித்தது என்பதும், தெளிவாகும். சிலம்பு என்ற சொல்லின் பொருள் ஒலியென் பதை இதுகாறுங் கண்டோம்.

குன்றக்குறவர் எழுப்பிய ஒலியே, இக்காவியத்தை எழுது தற்குக் காரணமாக இருந்தது என்பதையும் முன்னரேயே விளக்கினோம். எனவே இக்காவியம் ஒலி காரணமாக வளர்ந்த வரலாற்றைக் குறிப்பதாகலின் அப்பொருளைத் தரும் சிலப்பதி காரம் என்னும் தலைப்பினை இளங்கோவடிகள் இதற்குத் தந்தார் என்பது, மறுக்க முடியாத உண்மையாகும். இதுவே, சிலப்பதிகாரம் என இக்காவியத்திற்கு இளங்கோவடிகள் தலைப்புத் தந்தமைக்குக் காரணம் என்பதில் ஐயமில்லை.

உண்மையை உள்ளவாறுணர்ந்து சிந்தித்துச் செயல் புரியும் இளங்கோவடிகட்கு—வெறுப்பு விருப்பற்ற இளங்கோ வடிகட்கு, இக்காவியத்தினை எழுதுதற்குக் காரணமாக இருந்தது எது? என்பது தெரியாது போகுமோ?

## காவியம் எழுந்தமைக்குக் காரணம் ஒலியே ஆகும்

இக்காவியம் எழுதற்குக் காரணமாக இருந்தது சிலம் பாகிய அணியன்று, குன்றக்குறவர் எழுப்பிய ஒலியேயாகும். இதனாலேயே ஒலி காரணமாக வளர்ந்த வரலாற்றினை உரைப்பது - சிலப்பதிகாரம் - என்ற தலைப்பால் இளங்கோ வடிகள் இயற்றினர் என்பது தெற்றெனப் புலனாகும்.

பொதுமக்களால்—குன்றக்குறவரால் உணரப்பட்டு, குன்றக்குறவரால் ஒலி எழுப்பப்பட்டு, அஃதறிந்தருள் நீயெனக் குன்றக்குறவரால் கட்டளை விடுவது போன்று எழுப்பப்பட்ட ஒலியால் எழுந்த காவியமே, சிலப்பதி காரம் என்னும் காவியம் என்பது. இதுகாறுங் கூறியவற்றால் தெளி வாகும்.

இவ்வாறு பொருள் கொள்ளாது, சிலப்பதிகாரம் என்பதற்குச் ''சிலம்பு என்னும் அணி காரணமாக வளர்ந்த வரலாற்றினை உரைப்பது'' என்று பொருள் கூறுதல் ஒவ்வாது. ஒலி காரணமாக வளர்ந்த வரலாற்றினை உரைப்பது என்று சொல்லுதலே, சிலப்பதிகாரம் என்பதின் பொருள் என்பதை, இனி யாவது உணர்தல் அறிஞர்தம் கடனும் !

ஒலி தந்த வரலாற்றை உரைக்கும் '' சிலப்பதிகாரம்'' ஒலிபோன்று என்றும் அழியாது, ஒலிபோன்று அனைத்துயிர்க்கும் என்றும் நன்மை தந்து வழிகாட்டி அறிவூட்டும் என்பதில் ஐயமில்லை !!

வாழ்க ஒலிதந்த வரலரற்றை உரைக்கும் சிலப்பதிகாரம்.

---

## சிலப்பதிகாரத்தின் உயரிய தத்துவம்

'' சிலப்பதிகார ஆசிரியர் மூன்று முடிமன்னர் குடிகளுள் வைத்துச் சேரர்குடி என்னும் ஒருகுடியுட் தோன்றியவராயினும் அவர்தாம் இளமையிலேயே ஆர்வமும் செற்றமும் அகல நீக்கிய வீர முனிவராதலின் இம் முத்தமிழ்நாடு கிடக்க இப் பேருலகத்திற்கே பொதுமை யுற்றோராய் '' **யாதும் ஊரே யாவருங் கேளிர்** '' என்னும் உயரிய தத்துவத்தே தலைசிறந்து நின்று இவ் வருமந்த காவியத்தை நடுநின்று இயற்றியிருக்கும் அருமையை இதனைப் பயில்வோர் யாவரும் எளிதில் உணர்வர் ''

புலவர் பொ. வே. சோமசுந்தரனார்

# சோவியத்துப் பதிப்பகங்கள்

[சு. ந. சொக்கலிங்கம், எம்.ஏ.

செயலாளர், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்]

சோவியத்து ஒன்றியத்தில் பலதுறை வளர்ச்சி ஏற்பட்டுள்ளதை யாவரும் அறிவோம். அவற்றுள் கல்வித் துறையும் ஒன்று. கல்வித் துறையில் பெற்றுள்ள முன்னேற்றம் வியக்கத் தக்கது ; பாராட்டத்தக்கது. சோவியத்து ஒன்றியத்தில் நூற்றுக்கு நூறு பேர் படிக்கத் தெரிந்தவர். எழுதப் படிக்கத் தெரியாதவர்களை எந்த மூலையிலும் காண இயலாது. தற்குறிகளே இல்லை எனக் கேள்வியுற்றபோது என் மெய் சிலிர்த்தது. அறியாமையை அகற்றிடக் கல்லாமையைக் கல்லி எறிந்திடப் பாடுபட்ட கல்வித் தொண்டர்களுக்கு என் உள்ளத்திற்குள் வணக்கம் செலுத்தினேன். நம் இந்திய நாட்டில் எல்லோரும் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாய் ஆக வேண்டும். அதற்குரிய முயற்சிகளில் கற்றவர்களும் மற்றவர்களும் முழுமூச்சோடு பாடுபட வேண்டும். அறியாமை அகற்றப்பட்டால்தான் அதனோடு தொடர்புடைய மூடப் பழக்கவழக்கங்கள் யாவும் ஒழியும்.

அறியாமை நீங்கினால் மட்டும் போதுமா? எழுதப் படிக்கத் தெரிந்ததும், இலங்கு நூல்களைத் தொடர்ந்து கற்க வேண்டும் அல்லவா? தொடர்ந்து கற்காவிடில், கற்றலின் பயன் விளையாமல் போகும். ஆகவே, தொடர்ந்து படிக்க, பல நூல்கள் படிக்க, பல துறைகளிலும் படிக்க, பல கோடிக் கணக்கான நூல்களை அச்சிடுகிறார்கள். உலகிலேயே மிகக் குறைந்த விலையில் புத்தகம் கிடைக்கும் இடம் சோவியத்து ஒன்றியமே ஆகும். உலகிலேயே மிகுதியான அளவில் புத்தகங்களை அச்சிட்டு வெளியிடும் நாடு, சோவியத்து நாடு என அறியும்போது மகிழ்ச்சி பிறக்கிறது. சோவியத்து நாட்டில் படிப்பதற்குப் புத்தகங்கள் எங்கும் கிடைக்கின்றன ; எல்லோருக்கும் கிடைக்கின்றன ; குறைந்த விலையில் கிடைக்கின்றன. இந்த அரிய செயலை எப்படிச் செய்து வெற்றி கண்டார்கள் என அறிதல் வேண்டும். எனவேதான் இந்திய அரசாங்கம், ஓர் ஐவர் குழுவைச் சோவியத்து ஒன்றியத்திற்கு அனுப்பியது. இக்குழு மூன்று வார காலமாகச் சோவியத்து ஒன்றியத்திலுள்ள தாஷ்கெண்ட், லெனின் கிராத், மாஸ்கோ ஆகிய மூன்று இடங்களிலுள்ள முக்கியப் பதிப்பகங்களை நேரில்

சென்று பார்வையிட்டது. சோவியத்து ஒன்றியத்தின் அனைத்துப் பதிப்பகங்களைப் பார்க்க மாதங்கள் பல ஆகும். ஆயினும், ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்த்தால் போதுமன்றே ?

இந்தியாவிலுள்ள அனைத்து மாநிலங்களிலும், புத்தகம் வெளியிடும் பணி, பொதுத் துறையிலும், தனியார் துறையிலும் ஆற்றப்பட்டு வருகிறது. சில மாநிலங்களில் பாடப் புத்தகங்களைப் பொதுத் துறையில் வெளியிட்டுவருகிருர்கள். தமிழ்நாட்டில் 1960ஆம் ஆண்டில் பாடநூல்களை நாட்டுடைமையாக்கும் திட்டம் ஏற்பட்டது. அத் திட்டம் படிப்படியாக வளர்ந்து, 1972ஆம் ஆண்டில் அனைத்துப் பாடநூல்களையும் வெளியிடும் வகையில் வளர்ச்சி பெற்றுள்ளது. இந்தப் பணியைத் தமிழக அரசால் நிறுவப்பட்டுள்ள தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் சிறப்பாகச் செய்துவருகிறது. இவ்வாண்டில் இந்த நிறுவனத்தினர் பல நூருயிரக்கணக்கான பாட நூல்களை வெளியிட்டுள்ளனர்.

முதல் மூன்று வகுப்புகளுக்கான தமிழ்ப் பாடநூல்களை நான்கு வண்ணங்களில் கவர்ச்சிகரமாக வெளியிட்டிருக்கிருர்கள்.

இந் நிறுவனம் தன் பணியை இன்னும் சிறப்புற ஆற்றுவதற்குச் சோவியத்து ஒன்றிய முறைகளைப் பார்வையிட வேண்டும் எனக் கருதிய இந்திய அரசு, இந் நிறுவனத்தின் செயலாளரைச் சோவியத்து ஒன்றியத்திற்கு, ஐவர் குழுவில் ஒருவராக அனுப்பியது.

பாடப் புத்தகங்களையும், மற்ற நூல்களையும் வெளியிடும் பணியைக் கண்டறியச் சென்ற ஐவர் குழு பல திறப் பதிப்பகங்களைப் பார்வையிட்டது. ஒவ்வொரு பதிப்பகத்தினரும் வெளியிடும் நூல்களின் எண்ணிக்கையைக் கேட்டபோது மிகவும் வியந்தேன்; அனைத்து நூல்களும் விலையாகிவிடுகின்றன எனக் கேட்டபோது பெரிதும் மகிழ்ந்தேன். படிக்கும் ஆர்வம், புத்தகம் வாங்கும் வழக்கம் ஆகிய இரண்டும் சோவியத்து ஒன்றியத்தில் சிறப்பிடம் பெற்றுள்ளன. அந்நாட்டு மக்கள் படிப்பதில் மிகுந்த விருப்பம் உடையவர்களாய்க் காணப்படுகிருர்கள். டிராலி பஸ்ஸில் போகும்போது படிக்கிருர்கள்; மெட்ரோவில் செல்லும்போது படிக்கிருர்கள்; பூங்காக்களில் அமைதியாய் அமர்ந்து ஆழ்ந்து கற்கிருர்கள். அங்கு முதியவர்களும் கற்கிருர்கள்; இளைஞர்களும் கற்கிருர்கள்—ஏன்—

அனைத்துத் தொழிலாளர்களும் தொடர்ந்து படிக்கிறார்கள். அதனால்தான் ஒவ்வோர் ஆண்டும் வெளியிடப்படும் 1300 மில்லியன் (130 கோடி) நூல்களும் விலையாகின்றன. புத்தகங்கள் விலையாகாமல் தேங்கும் நிலை அங்கே இல்லை என அனைத்துப் பதிப்பகங்களிலும் கூறினார்கள். அச்சிடுவதற் குரிய தாளுக்கு என்ன செய்கிறீர்கள் என, ஒரு பதிப்பகத் தாரைக் கேட்டபோது, அந்தச் சிக்கலே இல்லை ; அச்சிடுவதற் கான தாள் தங்குதடையின்றிக் கிடைக்கிறது, வேண்டிய போது கிடைக்கிறது என்றெல்லாம் அப் பதிப்பக இயக்குநர் மொழிந்தார்.

அங்குப் பெரிதும் விற்கப்படும் நூல் எப்பொருளைப் பற்றியது எனக் கேட்டபோது, அறிவியல் நூல்கள் என அவர் அறிவித்தார். அங்கு விற்கப்படும் நூல்களுள் மூன்றில் ஒரு பகுதி அறிவியல் நூல்களே ஆகும் எனத் திட்டவட்டமாகக் கூறினார்.

குழந்தைகளுக்கான புத்தகங்களை வெளியிடும் பதிப்பகத் திற்குச் சென்றோம். அது பாடநூல்களை வெளியிடும் பதிப்பகம் அன்று ; அது பேரளவில் சிறப்பாய்ப் பணிபுரிகிறது. குழந்தைகள் அறிவுப் பசியைத் தணித்துக்கொள்வதற்காகப் பலவகையான புத்தகங்களை வெளியிடுகிறது. பொது அறிவு பெறுவதற்கு, இரண்டு அகவை முதல் 18 அகவை வரையுள்ள சிறுவர் சிறுமியர் பலதுறை அறிவு பெறுவதற்கு ஏற்ற நூல்களை வெளியிடுகிறது. குழந்தைகளின் வயதிற்கு ஏற்ப அறிவு வளர்ச்சியை முறையாகப் பெற, மிகவும் தரமான நூல்களை வெளியிடுகிறது. ஒவ்வோர் ஆண்டும் ஏறத்தாழ 650 தலைப்பு களில் வெளியிடுகிறது என்றும் அறிந்தோம். இவ்வாண்டில் மட்டும் 650 மில்லியன் (65 கோடி) புத்தகங்களை அங்குள்ள 108 குழந்தைப் புத்தகப் பதிப்பகங்கள் வெளியிட்டுள்ளன. எந்தெந்தத் துறைகளில் புத்தகம் வெளியிடுகிறீர்கள் என வினவியபோது, வரலாறு, அறிவியல், தற்கால இலக்கியம், வெளிநாட்டு இலக்கியம், அஞ்சாமையை வளர்க்கும் கதைகள், தொன்றுதொட்டு வழங்கிவரும் நல்ல கதைகள் ஆகிய பல துறை பற்றிய செய்திகள் வெளியிடுவதாய் அப் பதிப்பகத்தார் கூறினர்.

மாஸ்கோவிலுள்ள குழந்தைப் பாடநூல் பதிப்பகம் 1933ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது எனவும், அதைத் தொடங்கியவர் கோர்க்கி எனவும் ஆர்வத்தோடு அப் பதிப்பக இயக்குநர் அறிவித்தார் ; அப் பதிப்பகம் மட்டும் ஒவ்வோர்

ஆண்டிலும் 160 மில்லியன் (16 கோடி) புத்தகங்களை வெளி யிடுகிறது. குழந்தைகள் தம்முடைய கருத்துகளை அந் நூல் களைப் படித்த பிறகு கடிதங்கள் வாயிலாகத் தெரிவிக்கிருர்கள். இவ்வகையில் ஆண்டுதோறும் 30,000 கடிதங்கள் வருகின்றன வாம். இக் கடிதங்களைப் படித்து, குழந்தைகளின் சுவை யறிந்து தரமான நூல்கள் வெளியிடப்படுகின்றனவாம்.

கலைக்களஞ்சியங்களையும், அகராதிகளையும் வெளியிடும் பதிப்பகங்கள் பல அங்கு உள்ளன. மாஸ்கோவிலுள்ள இந்தப் பதிப்பகம் 1925ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது எனவும், தற்போது ஆண்டுதோறும் அப் பதிப்பகத்தில் 5000 டன்கள் தாள் பயன்படுத்தப்படுகிறது எனவும், கலைக் களஞ்சியம் 630 ஆயிரம் வரையில் விற்கப்படுகிறது எனவும் அறிந்தோம். இந்தி, வங்காளி, தமிழ், மலையாளம், தெலுங்கு ஆகிய மொழிகளுக்கும் ருசிய மொழியில் அகராதிகள் வெளி யிடப்பட்டுள்ளன. குசராத்தி—ருசியமொழி, கன்னடம்— ருசியமொழி, மராத்தி—ருசியமொழி ஆகிய அகராதிகளும் அச்சிடப்படுகின்றன. இந்தொனேசியா, தாய்லாந்து, பர்மா, நேபால், இந்தோ சீனு, லாவோசு ஆகிய நாட்டு மொழிகளுக்கான ருசிய அகராதிகளும் அச்சிடப்பட்டு வருகின்றன. சோவியத்து ஒன்றியத்தில் வாழும் 1308 எஃச்கி மோக்கள் படிப்பதற்கும் அம்மொழி அகராதி ஒன்று அச்சடிக் கப்பட்டுள்ளதாம்.

சோவியத்து ஒன்றியத்தின் பதிப்பகங்கள் நூல்களை வெளி யிடும் முறை, விற்கும் முறை, மக்கள் வாங்கிப் படிக்கும் பான்மை ஆகியவை மிகவும் வியந்து பாராட்டுதற்குரியன.

———

குறிப்பு : பதிப்புத் துறையில் நம் இந்திய நாடு பொதுவாகவும் தமிழ் நாடு சிறப்பாகவும் சோவியத்தைப் பின்பற்றி முன்னேறும் நாள் எந்நாளோ அறியேன் பராபரமே!

—வ. சு.

### அறிவோர்க் கனைத்தும் தம்முடை நாடே

ஆற்றவுங் கற்ரு ரறிவுடையா ரஃதுடையார்
நாற்றிசையுஞ் செல்லாத நாடில்லை யங்நாடு
வேற்றுநா டாகா தமவேயா மாயினுல்
ஆற்றுணு வேண்டுவ தில்.

—பழமொழி 4

# வடக்கும் தெற்கும்

[குலசை சித்தாந்தச்செல்வர் வி. குமாரவேலுப் பிள்ளை]

## சொற்பொருள் ஆராய்ச்சி

"வடக்கு வடக்குஎன்பர் வைச்சதொன் றில்லை
நடக்க வுறுவரே ஞான மிலாதார்
வடக்கி லடங்கிய வையகம் எல்லாம்
அகத்தி லடங்கும் அறிவுடை யோர்க்கே" —திருமந்திரம்

இதன் பொருள்: வடக்கு வடக்கு என்ற சொல் வழக்கு உண்டு. அஃது ஓர் இடத்தைக் குறிக்காது. திசையைக் குறிக்கும். உலகில் எந்த இடமும் ஓர் இடத்துக்கு வடக்காகவும், மற்றோரிடத்திற்குக் கிழக்காகவும் வேறோரிடத்திற்குத் தெற்காகவும் பிறிதோரிடத்திற்கு மேற்காகவும் அமைந்திருக்கும். இவ்வாறன்றி இந்த இடம்தான் வடக்கு என்று சுட்டிக் கூற உலகில் ஓரிடமும் இல்லை. ஆகவே சைவ சித்தாந்த நூல்களில் கூறப்படும் சொல் அகத்தைக் குறிக்கும். தெற்கு என்னும் சொல் புறத்தைக் குறிப்பதாம். இவ்வாறு பொருள் கொள்வர் அறிவுடையோர். வேறோராற்றால் பொருள் கொள்பவர் அறிவிலாதார் என்பதாம்.

இங்ஙனம் ஆகலின் தமிழ்நாட்டில் உள்ள சிவப்பதிகள் எல்லாம் தென் என்னும் அடைமொழி சேர்த்துச் சொல்லப் படுகின்றன. தென்புகலி, தென்றில்லைமன்று, தென் திருவாரூர் முதலியவற்றில் காண்க. தென் என்னும் சொல் புறத்தில் தென்படும் என்னும் பொருட்டாம்.

இனி வடக்கிருத்தல் என்ற சொற்றொடர் பழைய நூல் வழக்கில் உண்டு. அதற்கு, அகம் நோக்கியிருந்து தவஞ் செய்தல் என்பது பொருளாம். இப்பொருள் காணமாட்டாதார், 'வடதிசையை நோக்கியிருந்து' என்றும் 'பட்டினியிருந்து' என்றும் பொருள் கொள்வர். வடக்கிருந்து உயிர்நீத்தான் என்பது தவம் செய்துகொண்டிருந்தே உயிர் விட்டான் என்பதாம்.

வடமொழி, வடஎழுத்து என்ற சொற்களும் பழைய தமிழ் நூல்களில் காணப்படுகின்றன. அவற்றிற்கு முறையே தவம் செய்வார் வழங்கும் (மொழி) சொல் என்றும் அவர்கள் வழங்கும் ஜ, ஷ, ஹ முதலிய எழுத்துக்கள் என்றும் பொருள்

கொள்க. அவர்களும் தமிழ்மக்கள் ஆகலின் அச்சொற்களும் தமிழ்ச் சொற்களே; அவ்வெழுத்துக்களும் தமிழ் எழுத்துக் களேயாம். ஆதலால்தான் அச்சொற்கள் திசைச்சொற்களுள் அடங்கவில்லை. வடமொழி என்பது சொற்களேயாம், பாஷை (Language) அன்று என்பதறிக.

இனி வடகயிலை என்பது அகத்தில் காணப்படும் கயிலை எனப் பொருள்படும்; வடஆல்நிழல் என்பது அகத்தில் காணப்படும் ஆலின்நிழல் எனப் பொருள்படும். திருநாவுக் கரசு நாயனுருக்குச் சிவபெருமான் திருவையாற்றில் வட கயிலையை அகத்தில் காணுமாறு அருள் செய்தார்.

இவ்வாருகலின் வடநூல் என்பது அகத்தெழுவளியிசை நூலாம்; தென்னூல் என்பது புறத்தெழுவளியிசை நூலாம். வடநூல் வண்ண எழுத்துக்களால் ஆனது. தென்நூல் ஒலி எழுத்துக்களால் ஆனது. வண்ண எழுத்து என்பது அந்தந்த வண்ணமாக எழும் எழுத்து. அவ்வெழுத்துக்கள் ஐந்து வகைப்படும். அவை உருவவண்ண எழுத்து, ஒலி வண்ண எழுத்து, சுவை வண்ண எழுத்து, நாற்ற வண்ண எழுத்து, ஊற்று வண்ண எழுத்து என்பனவாம். அவை மக்கள் உள்ளத்தில் எழுவன. அவற்றிற்கு அழிவில்லை. நாம் விரும்பியபோதெல்லாம் அவை நினைவு வடிவமாக நம் உள்ளத்தில் எழும். இவ்வுண்மைகளை யெல்லாம் ஒவ்வொரு வரும் கண்டுகொள்ளலாம். மந்திரங்கள் எல்லாம் இவ்வண்ண எழுத்துக்களால் ஆனவைகளே; ஒலி எழுத்துக்களால் ஆனவை அல்ல. ஆகையால்தான் மணிவாசகப்பெருமானுர், ‘‘சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார் செல்வர் சிவபுரத்தினுள்ளார் சிவனடிக்கீழ்ப் பல்லோரும் ஏத்தப் பணிந்து’’ என்று அருளிச் செய்தார். பொருள் உணர்ந்து சொல்லும்போது உள்ளத்தில் எல்லா வண்ண எழுத்துக்களும் தோன்றுகின்றன. பொருள் உணராது சொல்லும்போது உள்ளத்தில் ஒலி வண்ண எழுத்துக்கள் மட்டும் தோன்றுகின்றன. ஏனைவண்ண எழுத்துக்கள் தோன்றுதல் இல்லை. இவ்வுண்மையை யாரும் சொல்லித் தெரிந்துகொள்ளலாம்.

**அருமறையும் ஆகமமும்**

இறைவன், அருமறை ஆகமம் என்ற இரு வகை நூல்கள் செய்துள்ளான். அருமறை உலகியல் ஒழுக்க நூலாம். ஆகமம் மெய்ந்நெறி நூலாம். அருமறை உலகர் எல்லார்க்கும்

உரியது. திருக்குறள் நூல் போலாம். ஆகமம் சத்திநிபாதர்க்கு உரியது. சிவஞானபோதம் போலாம். சத்திநிபாதர் என்பவர், நிலையாமை உணர்வும் (ஞானமும்) உலகப் பொருள்களில் பற்றற்ற தன்மையும் உண்மை அறிய விருப்பமும் உள்ளவர். அவ்விரு நூல்களிலும் ஆன்மாக்கள் அறிய வேண்டிய எல்லாப் பொருள்களும் சொல்லப்பட்டுள்ளன. அவ்விரு நூல்களும் அவ்விறைவன் திருவடிகளில் அடங்கியுள்ளன. அவ்விரு நூல்களும் இறைவனால் செய்யப்பட்ட முதல் நூல்களாம்.

*"வினையின் நீங்கி விளங்கிய அறிவின்*
*முனைவன் கண்டது முதல்நூ லாகும்."*

—தொல்காப்பியம்.

*"அவ்விரண்டும் அரனடிக்கீழ் அடங்கும்"*

—சிவஞானசித்தியார்.

*முனைவன் - முன்னோன் - முதல்வன்*

மக்கள் அறியவேண்டிய எல்லாப் பொருள்களும் சொல்லப்பட்டிருத்தலால் அவற்றை யாரும் அளந்தறிய முடியாதாம். ஆகவே இறைவனே மக்களில் கொள்ளத்தக்கவருக்கு அவர் கொள்ளக்கூடிய பொருளைக் கொள்ளும் வகையறிந்து அவருடைய உள்ளத்தில் எழுதி அறிவிக்கின்றான். அப்பொருள்களை அவர்கள் தங்கள் தாய்மொழியில் பாடி உலகத்தாருக்குத் தெரிவிக்கிறார்கள். தமிழ்ப் பெரியார்கள் தமிழில் பாடுகிறார்கள்; திருஞானசம்பந்தர் போல. வங்காளிப் பெரியார்கள் வங்கமொழியில் பாடுகிறார்கள். ஆங்கிலப் பெரியார்கள் ஆங்கிலத்தில் பாடுகிறார்கள். இவ்வாறே கண்டு கொள்க. இவ்வுண்மையைத் தமிழ் முனிவர் சம்பந்தப் பெருமான் நன்கு விளக்கியுள்ளார். அவர் கூறுமாறு,

*"...................................*
*இழுகுமலம் அழியும்வகை கழுவும்உரை கழுமல வளநகர்ப்*
*பழுதிலிறை எழுதுமொழி தமிழ்விரகன் வழிமொழிகள் மொழி*
*தகையவே."*

(க-சுள-கஉ)

*(தமிழ்விரகன் - ஞானசம்பந்தன்)*

*"வேதமோ டாகமம் மெய்யாம் இறைவன்நூல்*
*ஓதும் பொதுவும் சிறப்பும் என்று உன்னுக."*

—திருமந்திரம்.

*"அருமறை யாகமம்முதனூல் அனைத்தும் உரைக்கையினால்*
*அளப்பரிதாம் அப்பொருளை அரனருளால் அணுக்கள்*

*தருவர்கள்பின் தனித்தனியே தாம்அறிந்த அளவில்,*
*தர்க்கமோடு உத்தரங்களி னுல்சமயம் சாதித்து,*
*மிருதி, புராணம், கலைகள் மற்றும் எல்லாம் மெய்ந்நூலின்*
*வழி, புடையாம்அங்கம், வேதாங்கம்......''*

—சிவஞானசித்தியார்.

ஆகவே, உலகில் காணப்படும் எல்லா நூல்களும், இறைவனுல் செய்யப்பட்ட அருமறை ஆகமகங்களின் வழி நூல் களேயாம்.

ஆகமம் ஒரு காலத்தில் நூல் என்றே வழங்கப்பட்டது. இவ்வுண்மை, முதலாழ்வார்கள் மூவருள் ஒரு பெரியார் பாடி அருளிய செய்யுள் ஒன்றில் காணப்படுகிறது. அது வருமாறு:

*''அரன், நாரணன், நாமம்; ஆன்விடை, புள் ஊர்தி;*
*உரை நூல், மறை; உறையும் கோயில் வரை, நீர்;*
*கருமம் அழிப்பு, அளிப்பு; கையது வேல், நேமி;*
*உருவம் எரி, கார்; மேனி ஒன்று''*

என்றவாரும்.

இவ்வுண்மைகளை அறியாமையால் தமிழ்மக்கள், சமக் கிருதப் பற்றுடையார் கூறும் பொய்களில் மயங்குகிருர்கள். சமக்கிருதம் உலகில் யாருக்கும் தாய்மொழியாக அமையாமை யால் அம்மொழியில் பெரியார் யாரும் பாடவில்லை. ஆனுல் அம்மொழியில் வேதம் என்றும் ஆகமம் என்றும் நூல்கள் உளவே என்ருல் அவை யாவும் மொழி பெயர்ப்பு நூலாம் என்க. திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக் கிருர்கள். திருக்குறள் நூலைப் பல மொழிகளில் மொழி பெயர்த்திருக்கிருர்கள். அவற்றைப்போல என்று எண்ணுக.

---

## நல்லொழுக்கம் நிலைபெற

நம் சைவ ஆசிரியன்மார் எல்லாம்வல்ல இறைவனைச் சான்ருக வைத்து நல்லொழுக்க முறைகளை அறிவுறுத்திய அறிவுரைகளே மக்க ளுக்கு உண்மையிலே பயன்படுவனவாதலும், பௌத்த சமண ஆசிரியர் எங்கும் எல்லாருள்ளத்திலுஞ் சான்ருய் உள்ள இறைவனை அறவே விடுத்துக் கூறிய அறிவுரைகள் மக்களை நல்லொழுக்கத்தில் நிலை பெறுத்துதற்கு ஒரு சிறிதும் பயன்படுவன ஆகாமையும் தெள்ளிதின் விளங்கா நிற்கும்.

—மறைமலையடிகள்.

# தமிழில் ஏவல்வினை யமைப்பு

[திருமதி க. புட்பவல்லி, எம்.ஏ , டிப்ளோமா (தெலுங்கு)
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.]

தமிழ்மொழியில் பலவிதமான வினைகள் உள்ளன. அவற்றில் வியங்கோள்வினை, ஏவல்வினை, நிபந்தனைவினை, வினைநிலை புரைத்தல்வினை முதலியன முக்கியமானவையாகும். ஏவல்வினை மற்ற வினைகளிலிருந்து மாறுபட்ட அமைப்புக் கொண்டது. ஏவல்வினையில் காலங்காட்டும் உருபுகள் இல்லை. தன்மை, முன்னிலை, படர்க்கை எனும் மூவிடங்களுள் இது முன்னிலை இடத்திற்கே உரியது. ஏனெனில் கட்டளைகள், வேண்டு கோள் முதலியன கேட்பவருடன் நேரடியான தொடர்பை உடையன. செயல்வினை மட்டுமே ஏவல்வினையாகப் பயன் படுத்தப்படுகிறது.

தமிழ்மொழியில் உள்ள ஏவல்வினை தனிவினையடியாகவோ அல்லது கூட்டுவினையடியாகவோ அமையலாம்.

**தனிவினையடி :** சான்று : போ 'go'

**கூட்டுவினையடி :** சான்று : புரிந்துகொள் 'understand'. கூட்டுவினையடியில் துணைவினையின் சேர்க்கையின்றி வினை யடியைமட்டும் தனியாகப் பயன்படுத்த முடியாது கூட்டு வினையடி அமைக்க வேண்டுமானுல் துணைவினை தனிவினையின் இறந்தகால வினையெச்சத்துடன் சேரவேண்டும். ஏவல்வினை அமைக்கப் பலவழிகள் உள்ளன. ஏவல்வினைகளின் அமைப்பு அது வெளிப்படுத்தும் பல்வேறு குண இயல்புகளால் வேறுபடு கின்றது. ஏவல்வினை கட்டளையிடுவதிலும், வேண்டுகோள் விடுப்பதிலும், வழிகாட்டுவதிலும் பயன்படுத்தப்படுகிறது. ஏவல்வினை வாக்கியங்களில் குறைப்பு மாற்றிலக்கண விதியைக் (Deletion Transformation) கையாளலாம்.

**சான்று:** நீ கதவை மூடு > கதவை மூடு 'you close the door' 'close the door'

ஏவல்வினையைக் கீழ்க் கண்டவாறு பிரிக்கலாம்.

**1. ஒருமைஏவல் 2. பன்மைஏவல் 3. மரியாதைஏவல் 4. பணிவு ஏவல் 5. வெறுப்புஏவல் 6. எதிர்மறைஏவல்.**

**ஒருமைஏவல் :** வினையடியே ஒருமை ஏவலாக அமைகிறது.

**சான்று :** நீ வா 'you come'. ஒருமைஏவல் எளிய அமைப்புடையது. சமநிலையில் உள்ளவர்களுடனும், நெருங்கிய நண்பர்களுடனும் நிலையில் தாழ்ந்தவர்களுடனும், பேசுகையில் இது சாதாரணமாகப் பயன்படுத்தப்படுகிறது. ஒருமை ஏவல் கட்டளையிடவே எப்பொழுதும் பயன்படுத்தப் படுகிறது. ஒருமை ஏவலில் பயன்படுத்தப்படும் பிரதிப் பெயர் 'நீ' ஆகும். வினையடியுடன் விளிச்சொற்களாகிய அடா, அடீ, போன்றவற்றைச் சேர்த்துப் பணிவற்ற கட்டளை ஏவலை அமைக்கலாம்.

**சான்று :** வா + அடா > வாடா 'come'
போ + அடீ > போடீ 'go'

**பன்மை ஏவல் :**

வினையடியுடன் பன்மை உருபாகிய '(உ)ங்கள்' சேர்த்துப் பன்மை ஏவல் அமைக்கப்படுகிறது. பன்மை ஏவலில் 'நீங்கள்' பிரதிப் பெயராக இருக்கும்.

**சான்று :** நீங்கள் செய் + உங்கள் > நீங்கள் செய்யுங்கள் 'you (pl. H.) do'

பன்மை ஏவலை மரியாதையையும் பணிவையும் காட்டும் ஏவல்வினையாகவும் பயன்படுத்தலாம்.

**மரியாதை ஏவல் :** வினையடியுடன் 'உம்' என்ற இடைச் சொல் சேர்த்து மரியாதை ஏவல் அமைக்கப்படுகிறது. மரியாதை ஏவலில் பயன்படுத்தப்படும் பிரதிப் பெயர் 'நீர்' ஆகும்.

**சான்று :** நீர் வா + உம் > நீர் வாரும் 'you (H) come'

**பணிவு ஏவல் :** பணிவு ஏவலை அமைக்கப் பல வழிகள் உள்ளன. பணிவு ஏவல் வேண்டுகோள் விடுப்பதற்கும், வழி காட்டவும், முறைகளைச் சொல்வதற்கும் பயன்படுகிறது. பணிவு ஏவலை அமைக்க இடைச்சொல் 'உம்' 'செய்ய' வினையெச்சத்துடன் சேரவேண்டும்.

**சான்று :** நீ செய்ய + உம் > நீ செய்யவும் 'please you do'

பணிவு ஏவலை அமைக்க 'ஏன்' என்ற இடைச்சொல்லை வினையடியுடன் சேர்க்கவேண்டும்.

சான்று : நீ வா+ஏன் > நீ வாயேன் ‘please you (sg.) come’

இடைச்சொல் ‘ஏன்’ பன்மை ஏவலுடன் சேர்ந்து பன்மைப் பணிவு ஏவல் அமைகிறது.

சான்று : நீங்கள் படியுங்கள்+ஏன் > நீங்கள் படியுங் களேன் ‘please you (pl.) read’

வெறுப்பு ஏவல் :

‘தொலை’ என்ற துணைவினையை இறந்தகால வினையெச்சத் துடன் சேர்த்து வெறுப்பு ஏவல் அமைக்கப்படுகிறது.

சான்று : நீ போய்+தொலை > நீ போய்த் தொலை ‘you get out’

எதிர்மறை ஏவல் : எதிர்மறை ஏவல் ஒருவனது செயலைத் தடுத்துரைக்கிறது. எதிர்மறை ஏவலைக் கீழ்க் கண்டவாறு பிரிக்கலாம்.

(1) ஒருமை எதிர்மறை ஏவல் (2) பன்மை எதிர்மறை ஏவல் (3) பணிவு எதிர்மறை ஏவல்.

ஒருமை எதிர்மறை ஏவல் : ஒருமை எதிர்மறை ஏவலை அமைக்க எதிர்மறை உருபு ‘ஆத்’, ‘செய்ய’ வினையெச்சத்துடன் சேர்க்கப்படுகிறது. ஒருமை எதிர்மறை ஏவலின் விகுதியாக ‘ஏ’ அமைகிறது.

சான்று : நீ செய்ய+ஆத்+ஏ > நீ செய்யாதே ‘you do not do’

பன்மை எதிர்மறை ஏவல் :

பன்மை எதிர்மறை ஏவலும் ஒருமை எதிர்மறை ஏவலைப் போலவே அமைக்கப்படுகின்றது. முன்னிலைப் பன்மை விகுதி யாகிய ‘ஈர்கள்’ சேர்க்கப்படுகிறது.

சான்று : நீங்கள் செய்ய + ஆத்+ஈர்கள் > நீங்கள் செய்யாதீர்கள் ‘you (pl.) do not do’

பணிவு எதிர்மறை ஏவல் :

இடைச்சொல் ‘ஏன்’ ஒருமை எதிர்மறை ஏவலுடன் சேர்ந்து ஒருமை எதிர்மறை பணிவு ஏவலை அமைக்கிறது.

சான்று: நீ வராதே+ஏன் > நீ வராதேயேன் 'please you do not come'

இடைச்சொல் 'ஏன்' பன்மை எதிர்மறை ஏவலுடன் சேர்ந்து பன்மை எதிர்மறைப் பணிவு ஏவலை அமைக்கிறது.

சான்று: நீங்கள் வராதீர்கள்+ஏன் > நீங்கள் வராதீர்களேன் 'please you (pl.) do not come'

துணைபுரிந்த நூல்கள் :

1. Dr. M. Varadarajan, 'The structure of Imperatives in Tamil' (paper read in the Seminar on Dravidian Linguistics-II Annamalainagar, 1969.)

2. Jacobs, R. A. & Rosenbaum P. 5: *English Transformational Grammar*, Tokyo, 1968.

3. Lakoff Notes.

4. A. H. Arden: *A progressive grammar of common Tamil*, Madras.

---

## மறவன் பாட்டு

*(பாரதியார்)*

*முன்னாளில் ஐயரெல்லாம் வேதம்—ஓதுவார்*
*மூன்றுமழை பெய்யுமடா மாதம்*
*இந்நாளி லேபொய்மைப் பார்ப்பார்—இவர்*
*ஏது செய்தும் காசுபெறப் பார்ப்பார்.*

*பேராசைக் காரனடா பார்ப்பான்—ஆனால்*
*பெரியதுரை என்னிலுடல் வேர்ப்பான்*
*யாரானு லும்கொடுமை (செய்வான்—பணம்*
*அள்ளியிட வில்லையெனில் வைவான்)*

*பிள்ளைக்குப் பூணூலாம் என்பான்—நம்மைப்*
*பிச்சுப் பணங்கொடெனத் தின்பான்*
*கொள்ளைக்கே சென்(றாலும் வஞ்சம்—செய்து*
*கூசாமல் வாங்கிடுவான் லஞ்சம்)*

*அடைப்புக் குறியுள் உள்ளவை பாரதியார் பாடற்றொகுப்பில் விடுபட்டுள. ஆனால் பாரதி வழி என்னும் நூலில் ப. சீவானந்தம் (1947) காட்டியுள்ளார் (பக். 20)*

—புலவர் இரா. இளங்குமரன், மதுரை.

*

## சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர்

## தாமரைச்செல்வர் நெ. து. சுந்தரவடிவேலு

தமிழகத்தின் தலைநகராம் சென்னையில் அமைந்துள்ள சென்னைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகத் தாமரைத் திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் மீண்டும் அமர்த்தப் பெற்றிருக்கிறார்கள் என்பது அறிந்து மகிழ்ச்சி அடைகிறோம். தமிழ்நாட்டுக் கல்வித் துறையில் பல ஆண்டுகள் அரும்பணியாற்றிவரும் சுந்தரவடிவேலு அவர்கள் மீண்டும் துணைவேந்தராகப் பொறுப் பேற்றுள்ளது வரவேற்கத் தக்கதாகும். அவர்கள் தம் ஆட்சிக் காலத்தில் தமிழ் நாட்டுக் கல்வித் துறையில் பல சீர்திருத்தங்களைச் செய்து சென்னைப் பல்கலைக்கழகத்தின் புகழை மேன்மேலும் வளர்ப்பார்கள் என்று உறுதியாக நம்பலாம்.



அவர்கள் முதன் முறையாக ஆட்சியேற்ற காலத்தில் தமிழ்த்துறை வாயிலாகப் பல அரிய நூல்களை வெளியிடத் துணைபுரிந்தார்கள். தமிழ்த் தொடர்பாக ஆங்கிலத்தில் எழுதப்பெற்ற சில வரலாற்று நூல்களையும் மறுபதிப்புக் கொண்டுவரின் ஆராய்ச்சியாளர்கட்குப் பெரும் பயன்றரும்.

அவ்வாறே நீண்டகாலமாக அறிஞர்கட்கும் ஆராய்ச்சி யாளர்கட்கும் கிடைக்காதிருக்கும் தமிழ் அகர முதலி (தமிழ் லெக்சிகன்) தொகுதிகளை நம் துணைவேந்தரவர்கள் மீண்டும் விரைவிலே கிடைக்கச் செய்வார்கள் என்று நம்புவோம். சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் பிற திராவிடமொழிப் பேராசிரியர்களோடு சேர்ந்து 'திராவிட மொழிச் சொற்களஞ்சியம்' (Dravidian Vocabulary) என்னும் அகரமுதலியின் முதல் தொகுதியை வெளியிட்டார்கள். அதன் பிற தொகுதிகளும் விரைவில் வெளிவரும் என நம்புகிறோம்.

நம் துணைவேந்தரவர்கள் சிறந்த சிந்தனையாளர்; திறந்தினிது சொலல் வல்ல சொல்லாளர்; எண்ணிய எண்ணி யாங்கு எய்த வல்ல செயல் மறவர். இத்தகைய பேராற்றல் படைத்த அறிஞர் பெருமகனாரை டாக்டர் பட்டம் அதர்வினாய்ச் சேரும் என்பதில் ஐயமில்லை.

———

## தமிழகப் பொது நூலக இயக்குநர்
## திரு வே. தில்லைநாயகம்



தமிழ்நாட்டில் நூலக இயக்கம் கடந்த ஐம்பது ஆண்டுகளாக மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றது. தொடக்கத்தில் நகராட்சி, ஊராட்சி மன்றத்தாரும் சில தனிப்பட்டவர்களும் ஆங்காங்கு நூலகங்களை அமைத்து மக்களுக்கு அறிவுத் தொண்டு ஆற்றி வந்தனர். 1948இல் முதன் முதலாக, இந்தியாவில் தமிழகத்தில்தான் பொது நூலகச் சட்டம் நிறைவேற்றப் பெற்றது. 1950இல் அச்சட்டம் நடைமுறைக்குக் கொண்டு வரப்பெற்று மாவட்டங்கள் தோறும் நூலக ஆணைக் குழுக்கள் அமைக்கப் பெற்று அவற்றின்கீழ் நூலகங்களும் நிறுவப் பெற்றன.

கடந்த 22 ஆண்டுகளில் நூலகத்துறை சிறப்பாக வளர்ச்சியுற்று இன்று தமிழ்நாட்டில் ஆயிரத்துக்கு மேற்பட்ட கிளை நூலகங்களும் பன்னிரண்டு மாவட்ட மைய நூலகங்களும் மாநில மைய நூலகமுமாக மலர்ந்துள்ளது. இவை அனைத்தையும் நடத்திச் செல்லும் பொறுப்புப் பொது நூலகத்துறை இயக்குநரையே சாரும். தொடக்கத்தில் நூலகங்கள் புதிதாக அமைக்கப் பெற்றதால் இத்துறைக்கெனத் தனி இயக்குநர் இல்லாது கல்வித்துறை இயக்குநரே நூலகத்துறைக்கும் இயக்குநராகவும் இந்நாள்வரை பணி புரிந்தார். நூலகத்துறை பரந்த அளவில் விரிவடைந்தபின் அதற்கெனத் தனி இயக்குநர் வேண்டுமென்று கடந்த பதினைந்து ஆண்டுகட்கு மேலாக நூலகப் பணியில் ஆர்வமுடைய அனைவரும் விரும்பினர். நீண்டநாள் கனவு அண்மையில் தமிழக முதல்வர், டாக்டர் கலைஞர் அவர்கள் முயற்சியாலும் கல்வி அமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் அவர்கள் தூண்டுதலாலும் நனவாயிற்று.

30-7-72 முதல் தனியாகப் பொது நூலக இயக்குநர் பதவி உருவாக்கப்பெற்று அப்பதவியில் திரு வே. தில்லைநாயகம், எம்.ஏ., எம்.எல்.எஸ். பி.டி. அவர்களும் அமர்த்தப்பெற்றுர்கள். இது தமிழ்நாட்டு நூலக இயக்க வரலாற்றில் மிக முக்கியமான நிகழ்ச்சியாகும். இதனை மகிழ்ச்சியுடன் வரவேற்கிறோம்.

திரு. தில்லைநாயகம் அவர்கள் இதற்கு முன் பல ஆண்டுகள் கன்னிமரா பொது நூலகத்தின் நூலகராகப் பணியாற்றி வந்தார். அதற்கு முன் கல்வித்துறை இயக்குநகரக நூலகராகவும் அண்ணுமலைப் பல்கலைக் கழக நூலகராகவும் பணிபுரிந்துள்ளார். நூலகத் துறையில் பேரீடுபாடு கொண்டவர். கன்னிமரா நூலகரான பின் பொது மக்களோடு நல்ல தொடர்புகொண்டு சிறந்த நூலகப் பணியாற்றினுர்.

தமிழ்நாட்டில் நூலக இயக்கத்தைப் பரப்புவதற்காக அவ்வப்போது தமிழ் இதழ்களில் நூலக இயல், நூலகப் பணிபற்றிய கட்டுரைகளை எளிய தமிழில் இனிய நடையில் எழுதியுள்ளார். இவருடைய கட்டுரைகள் தொகுக்கப்பெற்று 'நூலக உணர்வு' என்ற தலைப்பில் நூல் வடிவில் சென்ற ஆண்டு வெளியிடப்பெற்றது. பாடல்கள் புனைவதிலும் இவருக்கு ஆர்வமுண்டு. இவர் தொகுத்த 'குறிப்பேடு' என்ற கையேடு பல செய்திகளைத் தொகுத்தளிக்கின்றது.

தாம் ஒரு சிறந்த நூலகராகத் திகழ்வதோடு தம்மைப் போல் பிறரும் சிறந்த நூலகப் பணியாற்ற வேண்டுமென்ப தற்காகக் கன்னிமரா நூலகத்தில் மாவட்டக் கிளை நூலகங் களில் பணிபுரிவோருக்குப் பயிற்சியளிக்கும் திட்டத்தைத் தொடங்கி இதுவரை 17 அணி நூலகர்களுக்குப் பயிற்சி யளித்துள்ளார். ஒவ்வோர் அணியிலும் 25 முதல் 30 நூலகர்கள் பயிற்சிபெற்றனர்.

ஆண்டுதோறும் தமிழில் வெளிவரும் குழந்தைகள் நூல்களுக்காகத் 'தமிழ்நாட்டுக் குழந்தை நூற்றொகை'யைத் தொகுத்து வந்தார். 1963, 64 ஆகிய இரு ஆண்டுகட்குரிய நூற்றொகை அச்சிடப்பட்டுள்ளன. பிற தொகுதிகள் அச்சி லுள்ளன. 'தமிழ்நாட்டு நூற்றொகை'யையும் அவர் பதிப்பித்து வந்தார்.

இவ்வாறு பல்வகை ஆற்றல்களோடு சிறந்து விளங்கும் இவர் பொது நூலகத்துறையின் நூலகராகப் பொறுப் பேற்றுள்ளது மிகப் பொருத்தமுடையதாகும். தமிழ்நாட்டில் நூலக இயக்கம் வளர இவர் அயராது பாடுபடுவார் என்று உறுதியாக நம்புகிறோம். இதுவரை பொது நூலகத்துறை இயக்குநர்களாக விளங்கிய தாமரைத்திரு நெ. து. சுந்தர வடிவேலு அவர்களாலும், திரு சை. வே. சிட்டிபாபு அவர் களாலும் சிறக்க வளர்ந்த இத்துறை திரு தில்லைநாயகம் அவர்களால் மேன்மேலும் வளருமாக.

---

# மறைமலையடிகள் நூல்நிலையம்



தமிழகச் சுற்றுலா அமைச்சர், மாண்புமிகு க. இராசாராம் அவர்கள்
நூற்காட்சியைப் பார்வையிடல்



திரு. தி. வி. சாம்பசிவம் பிள்ளையவர்களின்
தமிழ் ஆங்கில மருத்துவ அகராதியைக் கழக ஆட்சியாளர்
விரித்துக் காட்டுதல்

# மறைமலையடிகள் நூல்நிலையத்திற்கு அமைச்சர் இராசாராம் வருகை

தமிழகச் சுற்றுலா அமைச்சர் மாண்புமிகு இராசாராம் அவர்கள் சென்னை மறைமலையடிகள் நூல்நிலையத்திற்கு 1972 சூலை 18 ஆம் நாள் காலை 10 மணி அளவில் வருகை தந்தார்கள். நூலகத்தில் மறைமலையடிகளார் தம் ஆராய்ச்சிக்கெனத் தொகுத்து அழகாக மேலுறையிட்டு ஒவ்வொரு நூலிலும் தம் பெயரை அச்சுப் போன்ற அழகான எழுத்துக்களால் பொறித்துப் பாதுகாத்து வைத்திருந்த நூல்களைப் பார்த்து அமைச்சர் வியந்தார். தமிழறிஞர் இத்தனை ஆங்கில நூல்களைப் படித்துள்ளாரே என்று போற்றினர். தமிழகத்தில் வேறெங்கும் கிடைக்காத வகையில் தமிழ் நூல்கள் அனைத்தும் ஒரே இடத்தில் தொகுத்துப் பாதுகாத்து வைத்திருப்பது கண்டு வியந்தார்.

அவர் பார்வைக்காக இந்தி எதிர்ப்பு, தனித்தமிழ் வளர்ச்சி, தமிழ்ப் பெயர் மாற்றம் போன்றவற்றுடன் தொடர்பு கொண்ட கோப்புகளும், இராமலிங்க சுவாமிகள், பா. வே. மாணிக்க நாயக்கர், வ. உ. சி., மறைமலையடிகள், பேரறிஞர் அண்ணு போன்ருேர் எழுதிய நூல்கள், கருத்து விளக்க அட்டைகள், பழந்தமிழ்ப் புலவர்களின் படங்கள், கடிதங்கள் போன்றவையும் 'வள்ளலார் திருவருள் மண்டப'த்தில் காட்சியாக அமைக்கப் பெற்றிருந்தன.

நூலகம் பெரிய அளவில் அழகாகவும் தூய்மையாகவும் அமைக்கப் பெற்றிருப்பதை அமைச்சர் பாராட்டி 'இவ்வளவு சிறப்பாக நடத்துவதற்குப் போதிய வருவாயுள்ளதா?' என்று கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களிடம் கேட்டார். கழகத்தில் கிடைக்கும் வருவாயில் சரிபாதியை அறத்திற்கென்று ஒதுக்கி வைத்து அதிலிருந்து சென்னையில் 'மறைமலையடிகள் நூல்நிலையத்'தையும், பல்லவபுரத்தில் 'மறைமலையடிகள் கலைமன்றத்'தையும். நெல்லையில் 'சிவஞான முனிவர் நூல் நிலையம்', 'திருவள்ளுவர் தமிழ்ப் புலவர் கல்லூரி', 'குமரகுருபரர் குழந்தைப் பள்ளி' போன்ற சீரிய அமைப்புக்களை நடத்தி வருவதாக ஆட்சியாளர் விளக்கினர்.

ஏறத்தாழ 1½ மணிநேரம் நூலகத்தைப் பார்வையிட்டுப் பெரு மகிழ்வெய்திய மாண்புமிகு அமைச்சரவர்கள்,

"உயர்திரு மறைமலையடிகள் நினைவாக, பெரியவர் திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் அரும்பாடுபட்டு உருவாக்கியுள்ள நூல்நிலையத்தினை இன்று காணும் வாய்ப்புப் பெற்றேன். அளவிலா மகிழ்ச்சி அடைந்தேன். என் இளமைப் பொழுதில் நடந்த இந்தி எதிர்ப்புத் தொடர்பான நூல்கள், அறிக்கைகள், சொற்பொழிவுகள் அனைத்தும் குலையாவண்ணம் திரட்டப் பட்டுள்ள பாங்கு கண்டேன். பேருவகை கொண்டேன். மறைமலையடிகளார் எப்பேர்ப்பட்ட அறிவுச் செம்மல் என்பதை அவர்தம் நூல்கள் நமக்கு எடுத்துக் காட்டிக் கொண்டுள்ளன. தமிழகம் பெற்றெடுத்த

'நடமாடும் பல்கலைக்கழகம்' அவர் என்பதை நாட்டுச்கு உணர்த்த இந் நூல்நிலையம் நன்கு பயன்படும். எத்துணை முயற்சி, எவ்வளவு சிரமங்கள் மேற்கோண்டு இவ்வளவு நூல்களையும், கடிதங்களையும், குறிப்புக்களையும் திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் திரட்டியுள்ளார்கள் என்பதை அறியும் போது உள்ளம் அவருக்கு நன்றி சொல்லிக்கொண்டே யிருக்கிறது என்பதை எழுதாமல் இருக்க இயலவில்லை. தமிழ்கூறு நல்லுலகம் அவருக்கு என்றென்றும் நன்றிக்கடன் பட்டுள்ளது என்றே கூறலாம். இந்நூல்நிலையம் மேலும் பலமடங்கு வளரத்தக்க அளவு காரியங்கள் தொடர்ந்து நடைபெற வேண்டும் என்பது எனது பேரவா''

என்று நூலகப் பார்வையாளர் கருத்துரை ஏட்டில் உள்ளப் பூரிப்போடு தங்கள் பாராட்டுரையைப் பொறித்துள்ளார்கள்.

---

**திருமணம் செல்வக்கேசவராய முதலியார், எம். ஏ.**

பெரம்பூர்
சென்னை
மார்ச்சு 14, 1913.

ம. ா. ா. ஸ்ரீ

ப. சம்பந்த முதலியாரவர்களுக்கு விண்ணப்பம்.

ஐயா,

தாங்கள் நாளது மீ 12உ விடுத்த திருமுகம் நேற்றுக் காலையில் 11 மணிக்குக் கிடைத்தது. உடனே பதில் எழுதுவது இசையாததாயிற்று. ஐந்தாறு நாட்களாக மார்சளி பிடித்து ஒன்றும் செய்யவில்லாமல் பிணிப்புண்டிருக்கிறேன். இன்னும் 3½ மணி வரையிலும் எங்ஙன மாவது கூட்டத்துக்குப் போக வேண்டுமென்றே எண்ணியிருந்தேன். இடையிடையில் இருமுதலால் பேசக் குரல் எழவில்லை. ஆகவே நான் வராமையைக் குறித்துத் தாங்களும் மற்ற நண்பர்களும் மன்னித்தல் வேண்டும்.

நேரில் வந்தால் சொல்லலானதை இதில் சுருக்கமாகக் குறிக்கிறேன். நமது சுதேச பாஷைகளைப் பழையபடி பரீக்ஷைகளோடு தொடர்பு படுத்துவதைப் பற்றிச் சென்ற வாரம் ஸெனெட் மீட்டிங்கில் இங்க்லிஷ் புலவர்கள் எதிர்க்கக்ஷியாக ஏற்படுவார்களென்று எவர்களும் எதிர் பார்க்கவில்லை. இனி துரைத்தனத்தாரிடத்தில் முறையிட்டுக் கொள்வது

---

குறிப்பு : ஆங்கிலப் புலவர்கள் தமிழ்மொழிக் கல்விக் கிழைத்த தீங்கினை இக்கடித வாயிலாகச் சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் மனம் வருந்தி உணர்த்து கின்றார்.

தவிர நமக்கு வேறு வழியில்லை. நமது பாஷாபிமானம் ஒருபக்கம் இருக்கட்டும். சுதேசிகளில் இங்க்லிஷ் படிப்பவர் மிகச் சிலர். அவருள்ளும் இங்க்லிஷில் தீர்க்கமாக ஆராய்ச்சி செய்து புலமை நிரம்பி னவர்கள் பின்னும் சிலர். அவர்களிலும் குடிகளின் நன்மைக்காக உழைக்கின்றவர் விரல்விட்டெண்ணத் தக்கவரே. துரைத்தனத்தார் அப்போதப்போது ஏற்படுத்தி வருகின்ற சீர்திருத்தங்களை உள்ளபடி யறிந்து ஏற்கெனவே நடக்கக் கூடிய அறிவு பொது ஜனங்களுக்குப் போதாது. இவைகளை விளக்குதற்குரிய சுதேச வர்த்தமான பத்தி ராசிரியர்கள் இராஜ பாஷையோடு சுதேச பாஷையிலும் புலமை நிரம்பி யிருந்தாலொழிய அப்பத்திரிகைகளால் ஜனங்களுக்கு நன்மை உண்டாகாது.

உள்வீட்டுச் சீர்திருத்தங்கள் எத்தனையோ செய்து கொள்வது இன்றியமையாததாயிருக்கின்றது. இவைகளை வியாச ரூபமாகவும், அபிநவ கதைகளின் வடிவமாகவும் (novels), நாடக ரீதியாகவும் சுதேச பாஷைகளில் எழுதி விளக்க வேண்டும். இவைகளைச் செய்யவல்லவர்கள், சுதேச பாஷைகளில் கல்லூரிப் பயிற்சியில்லாமல், எங்ஙனம் ஏற்படுவர்? இன்னும் ஒன்று சொல்ல வேண்டும். புராணப் பிரசங்கம் பண்ணிப் புராண வைராக்கியத்தை உண்டாக்கி வருவது தற்காலத்தில் போதுமா? ஸெர்வெண்ட்ஸ் அப் இன்டியா ஸொஸைட்டியார் சுதேச பாஷை களிலும் வல்லவராகி ஏழை ஜனங்களுக்கு அறிவு கொளுத்தாவிட்டால், அந்த ஸொஸைட்டியாருடைய நோக்கமெல்லாம் நிறைவேறுமா?

இதையெல்லாம் யோசிக்குமிடத்து, நமது சுதேச பாஷைகளைப் பழைய நிலைமையில் வைத்துப் பாராட்டவிடாமல் நமது ஜனங்கள் பின்னும் கடைப்பட்டவராவர். இங்க்லிஷில் மாத்திரம் வல்லவ ரானவர்கள் என்ன நன்மை செய்யக் கூடும்? ஏழை ஜனங்களின் தற்கால நிலைமையே பரிதபிக்கத் தக்கதாக இருக்கின்றது. அவர்க ளுடைய எதிர்கால நிலைமையை எண்ணும்போது எனக்கு அடி வயிற்றிலே இடிவிழுந்தது போல் இருக்கின்றது.

பிள்ளைகளுக்கு இஷ்டமில்லாததை வற்புறுத்தலாகாது என்கிற நியாயம் அநியாயமே. பிள்ளைகளுக்கு இப்பொழுது உள்ள பாடத்தையும் குறைத்துப் பாடமளித்தால், அவர் அதிக ஸந்தோஷமே அடைவார்கள். சில இங்க்லிஷ்காரருடைய அபிப்பிராயத்தை ஒட்டி நமது தரும துரைத் தனத்தார் பொது ஜன நன்மையைக் கெடுக்காமல், பழையபடி நமது பாஷைகளைப் பாராட்டும்படி நாம் அவர்களை வேண்டிக் கொள்வதே உசிதம்.

இங்ஙனம்
தங்கள் அன்பிற்குரிய'
தி. செல்வக்கேசவராயன்.

# கப்பலோட்டிய தமிழர் வ. உ. சி. நூற்றாண்டு விழா

நாட்டு விடுதலைக்காகச் சிறைசென்று செக்கிழுத்த சிதம்பரனாரின் பிறந்தநாள் நூற்றாண்டு விழா வருகிற செப்டம்பர்த் திங்கள் 5 ஆம் நாள் தமிழக மெங்கும் சிறப்பாகக் கொண்டாடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. அவர் பிறந்த ஊரான நெல்லை மாவட்டத்தைச் சார்ந்த ஓட்டப்பிடாரத்திலும் அவர் கப்பலோட்டிச் சிறப்பெய்திய தூத்துக்குடியிலும் அவர் மாவட்டத்தின் தலைமை இடமான நெல்லை நகரிலும் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடச் சிறப்பான ஏற்பாடுகள் மாவட்ட ஆட்சித் தலைவர் தலைமையின்கீழ் அமைந்துள்ள குழுவால் செய்யப்பட்டுள்ளன.



அன்னியரை எதிர்த்துக் கப்பலோட்டியதால் வ. உ. சிதம்பரனார்க்குத் தூத்துக்குடித் துறைமுகத்தின் வாயிலில் பெரிய சிலை ஒன்று திறக்கப்பட இருக்கிறது. அச் சிலையைத் திறந்து வைக்க இந்தியத் தலைமை யமைச்சர் இந்திராகாந்தி அம்மையார் வருகிறார். நூற்றாண்டு விழாவை யொட்டி இந்திய அரசு அஞ்சல் துறையினர் வ. உ. சி. நூற்றாண்டு விழாச் சிறப்பு அஞ்சல் தலையை வெளியிடுகின்றனர். இவ் விழா ஒவ்வொன்றிலும் தமிழக முதல்வர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களும் கலந்து கொள்கிறார்கள்.

இவ் விழாவை யொட்டித் தூத்துக்குடி திரு. மு. சி. வீரபாகு அவர்கள் விடுத்துள்ள அறிக்கையில் "திலகருக்குப் பக்க பலமாக நின்று செயலாற்றிய தளபதி - தென்னாட்டில் புரட்சிக் கனலைப் பறக்க விட்டவர் - இந்தியாவிலேயே முதன் முதலாகக் கப்பலோட்டிய தனிச் சிறப்புடையவர் அவர். ஆகவே அவரது நூற்றாண்டு விழாவைத் தமிழகம் மட்டுமல்லாமல் இந்திய நாடு முழுமையும் கொண்டாடுவதுதான் பொருத்தமாக இருக்கும்" என்று குறிப்பிட்டுள்ளார். தேசிய ஒருமைப் பாட்டைப் பற்றிப் பேசும் நாட்டுத் தலைவர்கள் செய்ய வேண்டிய செயல் இது.

வ. உ. சி. நூற்றாண்டு விழாச் செய்திகளோடு 'செந்தமிழ்ச் செல்வி' யின் அடுத்த இதழ் சிறப்பு மலராக வெளிவரும்.

# செய்திகளும் குறிப்புக்களும்

## தந்தியிலும் இந்தி

இந்தி மொழியில் தந்தி அனுப்ப வசதியாகத் தேவநாகரி எழுத்தில் தந்தி யனுப்பும் முறை 1949 ஆம் ஆண்டில் சிறிய அளவில் துவக்கப் பட்டது. அம்முறை இப்போது, இந்தி மொழிப் பகுதிகளில் 4440 தந்தி அலுவலகங்களில் செயல்படுகின்றது. இதற்கென 8655 அரசு ஊழியர் களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டுள்ளதாம். மேலும் இத்துறையில் பயிற்சி பெறுமாறு ஊழியர்கள் கட்டாயப்படுத்தப்படுகிறார்கள் என்றும், தாமாகவே விரும்பி இப் பயிற்சியினை மேற்கொள்வோருக்கு 200 ரூபா பரிசாக வழங்கப்படுகிறது என்றும் நடுவணரசுச் செய்தி கூறுகிறது.

ஆம்; அன்று வெள்ளையர் ஆட்சிக் காலத்தில் ஆங்கிலத்தை இப்படித் தான் மெள்ள மெள்ளப் புகுத்தினர். அதே முறையை இன்று வடவர் மேற்கொண்டுள்ளனர். எனவே இதில் வியப்பில்லை. ஆனால், ஆங்கிலம் புகுத்தப்பட்ட முறையில் நாகரிகமும் சனநாயகப் பண்பும் கலந் திருந்தன. இன்று அப்படியில்லை; சட்டத்தின் துணைகொண்டு தன்னிச்சைப் (சர்வாதிகாரம்) போக்கில் நடைபோடுகிறது இந்தி! நடக்கட்டும். தமிழர் பிறமொழியாளர் ஆட்சியின்கீழ் இருத்தல் வேண்டும் - அதுவே 'சுதந்திரம்' என்ற உண்மையினை இனியேனும் தமிழகம் உணரட்டும்.

## அமைச்சரின் இந்தி ஆர்வம்!

"இந்திமொழி வழங்காத பகுதிகளில் இந்தி மொழியை விரைவில் பரப்ப நாம் புதிய வழிமுறைகளைக் கண்டறிந்தாக வேண்டும். இந்தி தான் இந்தியாவின் இணைப்பு மொழி. ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் இந்தியை நாடு முழுதும் பரப்புதற்கான வழிமுறைகளை இந்தி சிக்கா சமிதி கண்டறிய வேண்டும். இந்தி வழங்காத பகுதிகளில் வாழும் மக்கள் தாமாகவே விரும்பி இந்தியைக் கற்றுக்கொள்ளும் நிலையை உருவாக்க வேண்டும்." என்று நடுவணரசின் கல்வி அமைச்சர் நூருல் அசன் அண்மையில் புது தில்லியில் இந்தி சிக்கா சமிதி என்னும் நிலயத்தின் 25 ஆவது ஆண்டுக் கூட்டத்தைத் துவக்கி வைத்துப் பேசியகாலை குறிப்பிட்டார்.

அட பாவமே! நாட்டில் கல்வி கற்றோர் தொகை குறைவாக இருப்பதைப் போக்க வழிவகை காண வேண்டிய ஒரு கல்வி அமைச்சர், இந்தியைப் பரப்புவதில்தானா இவ்வளவு அக்கறை காட்ட வேண்டும்! அதிலும் பல அரசியல் சிக்கல்களுக்கு அடிப்படைக் காரணமாகி, இவ் விந்தியத் துணைக் கண்டத்தை அலக்கழித்துக் கொண்டிருக்கும் பிரச்சினை யில் இவருக்கு ஏனோ இத்துணை ஆர்வம்! இப்படிப் பட்டவர்கள் ஒன்று நல்ல கல்வித்துறை அறிஞர்களாயிருக்க வேண்டும்; அல்லது நல்ல அரசியல் நோக்கம் உடையவர்களா யிருத்தல் வேண்டும்.

## தாய்மொழியில் அறிவியல்

"அறிவியல் பற்றிய அறிவு இந்திய மக்களுக்கு ஏற்பட வேண்டுமாயின், அதனை இந்திய மொழிகளில் பயிலும்படி மக்களுக்கு எடுத்துரைக்க வேண்டும்." என்று அண்மையில், அறிவியல் தொழில் துறை ஆய்வுக் குழு இயக்குநர் டாக்டர் நாயுடம்மா என்பவர் பெங்களூரில் "யந்திரா சகத்" என்னும் கலைக் களஞ்சியத்தின் நான்காவது தொகுதியை வெளியிட்டுப் பேசியகாலை குறிப்பிட்டார்.

எக்கலையும் வளர அது தாய்மொழியில் மக்களிடையே விளக்கம் செய்யப்பட வேண்டும். அறிவுபெற அதுவே ஏற்ற வழி. இது பற்றியே தமிழகத்திலும் அருங்கலைகள் பல தமிழில் வெளிவர வேண்டுமென நாமும் விழைகிறோம். டாக்டர் அவர்களின் அறிவுரைப்படி இந்திய மொழிகளில் அறிவியல் பரப்பப்பட வேண்டுமாயின் முதலில் அந்தந்த மாநில மக்கள் தத்தம் தாய்மொழி வளர்ச்சிக்கு வழிகோல வேண்டும். அதற்கு அரசினர் துணைபுரிய வேண்டும். துணைபுரியா விடினும் இந்தி போன்ற ஒரே மொழிக்கு ஆக்கந் தேடும் ஆகாத பணியினையேனும் கைவிட வேண்டும்.

---

# மதிப்புரை

## வாழ்க்கை விளக்கு

[ஆசிரியர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார். வெளியிட்டோர் : கலைவாணி புத்தகாலயம். விலை : ரூ 4. 00]

ஏட்டளவில் பல்கிப் பெருகி வரும் திருக்குறள் கருத்துக்கள் நாட்டளவில் பரவி, மக்களின் நடைமுறை நல்வாழ்வுக்குப் பயன்படல் வேண்டும் என்னும் குறிக்கோளினை அடிப்படையாகக் கொண்டு தவத்திரு குன்றக்குடி யடிகளார் தமிழகத்தில் பல்வேறு கூட்டங்களில் பேசிய பேச்சுக்களின் தொகுப்பே 'வாழ்க்கை விளக்கு' என்னும் இவ் அரிய நூல். இதன்கண் 25 கட்டுரைகள் அடங்கியுள்ளன. சமயம், சமுதாயம், அரசியல், இலக்கியம் ஆகிய துறைதோறும் அடிகளார் பெற்றுள்ள பட்டறிவும், கற்றுள்ள கல்வியறிவும் நுண்மாண் நுழைபுலமும் இந்நூலின்கண் ஒளிவீசிக் கற்போர்க்கு அறிவு ஒளி நல்கும் நல்லதொரு வாழ்க்கை விளக்காக அமைந்துள்ளது இந்நூல். தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் கருணாநிதி, அமைச்சர் கண்ணப்பர், டாக்டர் சஞ்சீவி ஆகியோரின் பாராட்டுக்களுடன் வெளி வந்துள்ள இந்நூல் உண்மையிலேயே வாழ்க்கைக்கு உதவும் வாழ்க்கை விளக்கு ஆகும் எனல் மிகையன்று. திருக்குறளின் திறனறிய விழைவோர்க்கு இந்நூல் ஒரு நல் விருந்தாகும்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ சுப்பையா.

கடந்த ஓராண்டுக் காலத்தில் வெளிவந்துள்ள

# கழகப் புதிய வெளியீடுகள்

(1971—1972)

| | | |
|---|---|---|
| மொழியரசி—சாமிவேலாயுதம் பிள்ளை | 4 | 50 |
| தமிழ் அகராதிக் கலை —பேராசிரியர் சுந்தர சண்முகனார் | 10 | 00 |
| தமிழ்ப்புலவர் வரிசை (29 ஆம் புத்தகம்) —சு. அ. இராமசாமிப் புலவர் | 2 | 50 |
| திருவகுப்பு உரை—டாக்டர் வ. சு. செங்கல்வராய பிள்ளை | 5 | 50 |
| முருகவேள் பன்னிரு திருமுறை (6-ஆம் தொகுதி) ,, | 15 | 00 |
| நிலக்கரியின் கதை—என். கே. வேலன், பி.ஏ. | 2 | 25 |
| ஆலிசின் அற்புத உலகம் ,, | 3 | 50 |
| தமிழ்ப் பேரறிஞர் பா. வே. மாணிக்க நாயக்கர் —என். கே. வேலன், பி.ஏ. | 3 | 00 |
| உரிச்சொல் நிகண்டு—காங்கேயர் | 4 | 00 |
| உரையாசிரியர்கள் கண்ட சொற்பொருள் நுண்மை விளக்கம்—புலவர் இரா. இளங்குமரன் | 4 | 00 |
| புறத்திரட்டு—பதிப்பாசிரியர் ,, | 15 | 00 |
| நன்னூல் காண்டிகையுரை —(புதிய பதிப்பு) ,, | 7 | 50 |
| மறைமலையடிகளார் உரைமணிக்கோவை —மறைமலையடிகள் | 5 | 00 |
| ,, அறிவுரைக் கோவை ,, | 4 | 50 |
| கோகிலாம்பாள் கடிதங்கள் (புதிய பதிப்பு) ,, | 8 | 75 |
| சைவசித்தாந்த ஞானபோதம் ,, | 7 | 00 |
| திருவருட்பாப் பெருந்திரட்டு (தொகுப்பு நூல்) | 12 | 50 |
| சிவப்பிரகாச சுவாமிகள் பனுவல் திரட்டு —குறிப்புரை : சு. அ. இராமசாமிப்புலவர் | 8 | 75 |
| அப்பர் வரலாற்றுராய்ச்சியும் தேவாரத்திறனாய்வும் —கவியரசு கு. நடேசக் கவுண்டர் | 8 | 00 |

பதிவு எண்: M. 4899

# அடுத்து வெளிவரவிருக்கும் கழகப் புதிய வெளியீடுகள்

## வாய், பல் மருத்துவம்

வாயும் அது சார்ந்த நோய்களும் பற்றி இந் நூலின்கண் புகழ்பெற்ற பல் மருத்துவர் நால்வர் அரிய செய்திகளைக் கூறி யுள்ளனர். மக்களுக்கு ஏற்படும் நோய்கள் பலவற்றுக்குப் பிறப்பிடமாக விருப்பவை பற்களும் வாயுமாகும் என்பதும், பற்களைப் பேணிக் காக்காவிடில் அஞ்சத்தக்க பல நோய்கள் ஏற்படுகின்றன என்பதும் இந்நூலால் அறியப்படும் உண்மை களாகும். சுருங்கச்சொல்ல வேண்டுமானல் பல் மருத்துவம் பற்றித் தமிழில் முதன்முதலாக வெளிவரும் அரிய நூல் இதுவே எனலாம். விளக்கப் படங்களுடன் கூடிய அரிய அழகிய பதிப்பு. இல்லங்களிலும், பொது நூலகங்களிலும் இருக்க வேண்டிய இன்றியமையாத நூல்.

| | |
|---|---|
| அட்டைக்கட்டு | விலை ரூ. 7 50 |
| கலிக்காக்கட்டு | விலை ரூ. 8 75 |

## வங்கத்துப்பரணி

ஆசிரியர் : அருட்கவி அரங்க சீனிவாசன்

இந்நூல் இந்தியா — பாக்கித்தான் போர்பற்றியும் போர்க் களக் காட்சி — பாக்கித்தான் ஆட்சியில் வங்கதேசம் பட்ட பாடுகள் — பின்னர் வங்கம் விடுதலைபெற்ற செய்தி — பாக்கித் தானின் தோல்வி இன்ன பிறவற்றைப் படிப்போர்க்கு உணர்ச்சி யூட்டும் வகையில், பாடப்பட்டிருக்கும் பரணியாகும். கலிங் கத்துப்பரணியைப் போன்ற கற்பனைவளம், பொருட் சிறப்பு ஆகியவை நிறைந்துள்ளன. விலை ரூ. 3 00

(அச்சிடப்பெறுவன)

### தனிப்பாடல் திரட்டு (5 ஆம் தொகுதி)

தொகுப்பு : சு. அ. இராமசாமிப் புலவர்

### தமிழ்ப்புலவர் வரிசை (30 ஆம் புத்தகம்)

சு. அ. இராமசாமிப் புலவர்

### பெருந்தேவனார் பாரதம் - விளக்கக் குறிப்புரையுடன்

### களவியற்காரிகை - விளக்கக் குறிப்புரையுடன்

### அகத்திரட்டு

(இது புறத்திரட்டைப் போன்றதோர் அரிய தொகுப்பு நூல்)

விளக்கக் குறிப்புரை ஆராய்ச்சி முன்னுரைகளுடன்

அப்பர் அச்சகம், சென்னை-1.